# பாண்டியன் பரிசு தரும் பல்சுவையின்பம்





திருக்குறளன்பன்
ஆ.வே.இராமசாமி

# பாண்டியன் பரிசு தரும் பல்சுவையின்பம்



அன்புடன்,
ஆ.வே. இராமசா
19-3-03

திருக்குறளன்பன்

## ஆ.வே.இராமசாமி

செயலர்,
திருக்குறள் பேரவை
வைரிசெட்டிப்பாளையம்

**திருவள்ளுவர் பதிப்பகம்**

திருவள்ளுவர் சாலை, திருவள்ளுவர் நகர்,
வைரிசெட்டிப்பாளையம் – 621 012.
திருச்சி மாவட்டம். ✆ 04327 – 52103.

முதல் பதிப்பு : மே, 1990– தி.ஆ.2021
இரண்டாம் பதிப்பு : தி.ஆ.2032, கி.பி. 2001

உரிமை : என் மூத்த மகன் செல்வன்
இராம.திருவள்ளுவனுக்கு
(ஓவியக் கலைஞன்)

பக்கம் : 96

விலை ரூ.25.00

நூல் கிடைக்கும் இடங்கள் :
திருவள்ளுவர் பதிப்பகம்
வைரிசெட்டிப்பாளையம் – 621 012.

சூப்பர் பேலஸ் புத்தக நிலையம்
திருச்சி – 2.

பழனியப்பா புத்தக் நிலையம்
திருச்சி – 2.

அச்சிட்டோர் :
வாஞ்சி மறுதோன்றி அச்சகம்
கூட்டுறவு நகர்,
துறையூர் – 621 010.

# படையல்

என்னை,

ஈன்று புரந்தே இன்புல வனாக்கிச்
சான்றோர் அவையைச் சாரச் செய்த – யான்
தொழுது போற்றும் தெய்வங்க ளான
**வேங்க டாசலம் செல்லம் மாள்தம்**
திருவடி மலர்களில் படைத்தேன் இதையே.

# பொருளடக்கம்

# வாழ்த்து வெண்பா

பாவலர் செ.சுந்தரம், க.மு., கல்.இ.,
வெண்பாவூர்

## நேரிசை வெண்பா

1. பாண்டியன் நற்பரிசின் பல்சுவை இன்பமதை
ஈண்டினிதே ஆ.வே.ரா.ஈந்துவந்து – மீண்டுமொரு
பாரதி தாசனையே பைந்தமிழில் தோற்றுவித்த
சீரதனை வாழ்த்தும் சகம்.

2. தொல்காப் பியநெறியில் துய்த்துணர எண்சுவையை
நல்காப் பியமதுபோல் நற்றமிழில் – இல்லையாம்
நன்றவரின் நூலாய்வில் நல்லமுதம் தோன்றுவதால்
நின்றிந்நூல் வாழ்ந்திடுமே நீடு.

3. தென்பொதிகைச் சந்தனமாய்த் தேய்ந்தே தமிழன்னைக்(கு)
அன்புறவே செய்யும் அரும்பணியால் – மன்பதையில்
வாழ்வாங்கு வாழ்ந்தவரும் வானுயர்ந்(து) எந்நாளும்
வாழ்வோங்கக் காண்பார் வளம்.

# அணிந்துரை

தமிழ்க்கடல்
இலக்கியச் செம்மல் இரா.இளங்குமரன் அவர்கள்,
திருவள்ளுவர் தவச்சாலை, அல்லூர் – 620 101.

திருக்குறளன்பர் திருமலி ஆ.வே.இராமசாமி அவர்கள் எழுதியுள்ள எளிய – இனிய – சுவைமிக்க – நயமான நூல் "பாண்டியன் பரிசு தரும் பல்சுவை இன்பம்" என்பது.

பாண்டியன் பரிசு எனப்படும் பைந்தமிழ்ப் பரிசு, பாவேந்தர் படைப்பு நயம் காட்டும் பாவிகமாகும். இப்பாவிக நயத்தைத் துய்த்த பாவலரும் ஆய்வருமாகிய திருக்குறளன்பர் தாம் பெற்ற இன்பத்தைத் தமிழார்வலரும் பெறும் வகையில் இயற்றி வழங்கியுள்ளார்.

தமிழர் வாழ்வுக்கும் இலக்கண இலக்கியத் தேர்ச்சிக்கும் ஒப்பிலா ஒரு சான்றாகத் திகழும் தொல்காப்பியத்தின் நோக்கிலே, தம் ஆய்வுப் பார்வையை ஆசிரியர் செலுத்தியுள்ள அருமை பாராட்டுக்குரியது.

தோற்றுவாய் என்பது தொடங்கிச் சிறந்த சொற்றொடர்கள் ஈறாகப் பதினெண் தலைப்புகளில் நூல் இயல்கின்றது.

பாண்டியன் பரிசின் கதைச் சுருக்கம் (3) வரையப்பெற்றமை நூலோட்டம் உணர்தற்கும், கதையோட்டம் தெளிதற்கும் இன்றியமையாப் பகுதியாகும்.

கதை மாந்தரைப் பற்றிய விளக்கக் குறிப்பு (2) இடம் பெற்றிருத்தல் இடத்தொடும் கருத்தொடும் அவர்களை இயைத்துப் பார்க்க ஏந்தாம்.

சுவையின்பம் என்னும் பகுதி நூலின் நுழைவாயில் அன்னது; அன்றியும் நூல் பகுப்புக்கு அரணாக அமைந்த பகுதியுமாம். அதுவே "நகை" முதலாம் சுவைகள் எட்டனையும் கொண்டு நூல் விரிதற்குக் களமாக அமைந்ததாகும்.

வீரச்சுவை (பெருமிதம்) முதலாக ஒவ்வொரு சுவையையும் எடுத்துக் கொள்ளும் ஆசிரியர், ஒவ்வொரு சுவைக்கும் நிலைக்களங்கள் இவை இவை என்பதைத் தொல்காப்பிய வழியிலே தெளிவித்து அதன் மேலேயே கட்டுரைச் சுவைபட விளக்கம் செய்வதை ஓர் ஒழுங்கு நெறியாகக் கொண்டு நூல் முழுவதும் செல்லுகிறார்.

எடுத்துக் கொண்ட சுவையைப் பாவேந்தரின் பாண்டியன் பரிசுப் பாடல்களைச் சான்றாகக் காட்டி ஒவ்வொன்றின் நிகழ்விடம், சூழல், கதைத் தொடர்பு என்பவற்றையும் நயமாகத் தொடர்புறுத்திச் செல்கிறார். அம்மட்டோ! புறப்பாடல், திருக்குறள், சீவக சிந்தாமணி, இராமயணம், பாரதம், பாரதியார் பாடல் இன்னன ஒப்பாம் பகுதிகளையும் உடனாக்கி எடுத்த செய்தியைத் தொடுத்து முடிக்கும் நெறியையும் மேற்கொண்டு, "மேற்கொண்ட" சுவையூட்டுகிறார்.

சொற்சுவை, பொருட்சுவை, உவமைச்சுவை, உருவகச் சுவை, சொல்லோவியச்சுவை சிறந்த சொற்றொடர்கள் என்னும் ஆறு பகுதிகளும் அருமையான தொகை நூலாய்த் திகழும் வண்ணம் செய்கின்றன; நூலில் ஆசிரியர் தோய்ந்துள்ள தோய்வும், எடுத்துக் கொண்ட உழைப்பும் இனிதில் விளங்கச் செய்வன; அன்றியும் கற்பார்க்கு இன்சுவைப் பாகைத் திரட்டிக் கையிற் கொடுத்தது போன்ற கவின்செய்வன.

பிறபிற புலவர்க்கு அரிய செய்தி நகைச்சுவை படப்படாடுதல். ஆனால் பாவேந்தருக்கு அச்சுவையுண்டாகப் பாடுதல் மிகமிக எளிமை! பாவேந்தர் என்றால் வீறும் வெகுளியும் தோன்றும் என்பது எத்தகு உண்மையோ, அத்தகும் உண்மை அவர் நகைச்சுவைக்கும் உண்டு! புரட்சிக் கருத்துகள், பெண்ணின் விடுதலை, இயற்கையெழில் என்பனவெல்லாம்தாம் என்ன! பாவேந்தர் பாடல்களில் கொஞ்சமா?

பாவேந்தர் பாடல்களைத் துய்ப்பார்க்கு ஓர் ஆற்றுப்படை இது! பாண்டியன் பரிசு நோக்கிய ஆற்றுப்படை என்பது மட்டுமன்று! பாவேந்தர் படைப்புக்கு – சுவை விருந்துக்கு – ஆற்றுப்படை!

பாட்டுக்குச் சுவையுண்டு! சாப்பாட்டுக்கும் சுவையுண்டு! சாப்பாட்டுச் சுவை ஆறு என்பது அறுதி! பாட்டுச் சுவையோ எட்டு என்பது உறுதி! எட்டாச் சுவையாம் எட்டுச் சுவையை எட்டிப்பிடிக்க வழிகாட்டி அழைக்கிறார் திருக்குறளன்பர்!

அவர்தம் சுவைத் திறம் வாழ்க!
முயற்சி வெல்க!
பாவேந்தர் படைப்பு நயம் பளிச்சிடுக!

அன்பன்,
**இரா.இளங்குமரன்**

# நன்றியுரை

தமிழன்னையின் தவச்செல்வராம் பாவேந்தர் இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற புரட்சிப் பாவலர் ஆவார். அவர் படைப்புகளில் தலைசிறந்தது “பாண்டியன் பரிசு”.

புதுமைக்கவி பாரதியின் தாசனுக்குத் தாசனாகிய **உவமைக் கவிஞர் சுரதா** அவர்கள், யான் எழுதிய “திருக்குறள் தரும் உவமை இன்பம்”, “சிந்தாமணி நயம்” ஆகிய நூல்களைச் சுவைத்துவிட்டுப் “பாவேந்தரின் நூற்றாண்டையொட்டிப் பாவேந்தர் பாநயம் எழுதுங்கள்” என்று பகர்ந்தார்கள்.

பாவேந்தர் பாக்களுக்கெல்லாம் நயம் எழுதுவதாயின் பல்லாயிரக் கணக்கான பக்கங்களாக விரியும். அனைவரும் விலை கொடுத்து வாங்கிப் படித்தல் இயலாது. ஆதலின் எளியவரும் எளிதாக வாங்கிப் படித்துச் சுவைக்கும் வகையில் பாண்டியன் பரிசின் நயம் மட்டும் எழுத எண்ணினேன். அதன் விளைவாகவே இந்நூல் உருவாயிற்று. இங்ஙனம் இந்நூல் உருவாகத் தூண்டுகோலாக இருந்த உவமைக் கவிஞர் அவர்களுக்கு என் நன்றி உரித்தாகுக.

திருவள்ளுவர் தவச்சாலை நிறுவனரும், செந்தமிழந்தணரும், தமிழ்க்கடலும் ஆகிய **இலக்கியச் செம்மல் இரா.இளங்குமரனார்**, நாடெல்லாம் சுற்றி நாளும் நற்றமிழ்ப் பணியாற்றுபவர்; இருநூற்றுக்கும் மேற்பட்ட நூல்களின் ஆசிரியர்! சுமார் பத்தாயிரம் பாக்கள் இயற்றியவர்! ‘இலக்கண வரலாறு’ என்னும் நூலுக்காகத் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகத்தின் பரிசு பெற்றவர்! தமிழக அரசின் திரு.வி.க. விருது பெற்றவர்! இப்பெருமகனார், தம் ஓயாத் தமிழ்ப்பணிகளுக்கிடையில், இந்நூலை முழுமையாகப் படித்துச் சிறப்பான அணிந்துரை

வழங்கியுள்ளார்.

இத்தமிழ்ப் பெருந்தகையாளருக்கு என் தமிழ் நெஞ்சை உரிமையாக்குவதைத் தவிர வேறெவ்வகையில் நன்றி நவில இயலும்!

என் உறவினரும் இனிய நண்பரும் தமிழார்வலரும் ஆகிய **வெண்பாவூர் சுந்தரம்**, ஊரின் பெயருக்கேற்ப வெண்பா பாடுவதில் வல்லவர். புதுவை அரசிடம் பாரதிப் பட்டயம் பெற்றவர். அவர் வாழ்த்து வெண்பா வழங்கியுள்ளார். அவருக்கு என் நன்றியும் வாழ்த்தும் உரித்தாகுக!

இந்நூல் அச்சேறுவதற்கேற்பச் செம்மையான கையெழுத்துப்படியாக்கிக் கொடுத்தவர், என் முன்னாள் மாணவி திருமதி.வசந்தி நடேசன் அறி.இ.க.இ., என் மூத்த மகனும் ஓவியக் கலைஞனுமாகிய **திருவள்ளுவன்** முதல் பதிப்பிற்கு அட்டைப் படத்தை அழகாக அமைத்தார். இந்த இரண்டாம் பதிப்பிற்கு ஓவியர் ஜமால், காவியத்தின் காதலர்களை அட்டைப்படத்தில் அழகாக வரைந்துள்ளார். அவர்களுக்குத் தமிழன்னையின் தண்ணருள் உண்டாகுக! நலமும் வளமும் ஓங்குக! துறையூர் **வாஞ்சி மறுதோன்றி அச்சகத்தினர்** குறுகிய காலத்தில் இந்நூலைச் சிறப்பாக அச்சிட்டுக் கொடுத்தார்கள். அவர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் நன்றி!

2001 இல் நான் எழுதிப் புகழ்பெற்ற திருக்குறள் பொன்மொழிகள், நூலக வாசர்களுக்குப் பயன்படும் படியாகப் பின்னிணைப்பாகச் சேர்த்துள்ளேன்.

வைரிசெட்டிப்பாளையம், இங்ஙனம்,
10.11.2001. **ஆ.வே.இராமசாமி**

# 1. தோற்றுவாய்

அருந்தமிழ்ப் புலவன்!

ஆண்மை மிக்கோன்!

இன்னலுக் கஞ்சான்!

ஈவேராத் தொண்டன்!

உழைப்போர் தோழன்!

ஊக்கஞ் சான்றோன்!

எண்ணத்தில் உயர்ந்தோன்!

ஏறெனத் திகழ்வோன்!

ஐயம் அகற்றுவோன்!

ஒப்பிலாக் கவிஞன்!

ஓதுவது ஒழியான்!

ஔவை மொழி போற்றுவோன்!

பகுத்தறிவுப் பாசறை!

புரட்சிப் புயல்!

பாவின் வேந்தன்!

பாரதியின் தாசன்!

சுரதாவின் ஆசான்!

அன்னவன் பாடிய

'பாண்டியன் பரிசு தரும்

பல்சுவையின்பம்' பாரீர்!

# 2. கதை மாந்தர்

வேலன் : கதைத் தலைவன்; தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்; அஞ்சா நெஞ்சன்; நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் மிக்கோன்.

அன்னம் : கதைத் தலைவி; அழகும் அறிவும் பண்பும் மிக்கோள்; சூழ்ச்சி வெள்ளத்தை எதிர் நீச்சலால் கடந்தோள்.

வீரப்பன் : வேலனின் தந்தை ; திருடர் தலைவன்; திருந்திய உளத்துடன் தீயோரை எதிர்த்து நல்லோர்க்கு உதவியவன்.

ஆத்தாள் : வீரப்பன் மனைவி; அன்னத்தின் செவிலித்தாய்; வேலனின் வீரத்தாய்; அன்னத்திற்கு உற்றுழி உதவியவள்.

கதிரைவேல் : அன்னத்தின் தந்தை ; கதிர் நாட்டரசன்; செங்கோலன்; விழித்த கண் வேல் கொண்டெறிய அழித்திமையா அஞ்சாநெஞ்சன்.

கண்ணுக்கினியாள் : அன்னத்தின் தாய்; கதிர்நாட்டரசி; கணவனுக்கினியாள்; அநீதியை எதிர்த்துப் போர்க்கோலம் பூண்ட வீரமடந்தை.

வேழமன்னன் : வேழ நாட்டரசன், வெளுத்தவை யெல்லாம் பாலென எண்ணுபவன்;

| | | |
|---|---|---|
| | | உண்மையுணர்ந்து நல்லோர்க்கு உதவியவன். |
| நரிக்கண்ணன் | : | கண்ணுக்கினியாளின் அண்ணன்; வேழ நாட்டுப் படைத்தலைவன்; நரிக் குணத்தான்; கயமையின் வடிவம். |
| பொன்னப்பன் | : | நரிக்கண்ணன் மகன்; சிரிக்க உடலெடுத்த கிறுக்கன். |
| சீனி | : | கணக்காயன்; வேலனின் ஆசிரியன்; வஞ்சகத்தை வெல்ல உதவியவன். |
| நீலன் | : | நரியின் அமைச்சன் மகன்; சுயநலமும் வஞ்சகமும் மிக்கவன்; சூழ்ச்சி மிக்கவன். |
| நீலி | : | அன்னத்தின் உயிர்த்தோழி; நீலனால் வஞ்சிக்கப்பட்டவள். |
| பாண்டியன் பரிசு | : | கதிரைவேல் மன்னன் முன்னோருக்குப் பாண்டிய வேந்தனால் அளிக்கப்பெற்ற, கதிர்நாட்டுரிமைப் பட்டயமும், பாண்டியன் வாளும், ஆடையணிகளும் அடங்கிய பொற்பேழை. |

1057



# 3. கதைச் சுருக்கம்

சீர்மிகுந்த கதிர்நாட்டின் மேல், நரிக்கண்ணன் சூழ்ச்சியால், எதிர்பாரா வண்ணம், வேழநாட்டுப் படைகள் போர் தொடுத்தன. வீரம்மிக்க கதிர்வேல் மன்னன் போருக்குத் தயாரானான். அண்ணன் நரிக்கண்ணனின் வஞ்சகத்தை உணர்ந்த கண்ணுக்கினியாள், அவனைப் போரில் கொல்வதாகச் சூளுரைத்துப் போர்க்கோலம் பூண்டாள்.

இருநாட்டுப படைகளும் வீரத்துடன் போரிட்டன. கதிரைவேல் மன்னனும் வேழ மன்னனும் தனிப்போர் புரிந்து கொண்டிருக்கும் பொழுது, வஞ்சக நரிக்கண்ணன் முகமூடியணிந்து, பின்புறம் வந்து, கதிரைவேலின் முதுகில் வேலெறிந்து விட்டு ஓடிவிட்டான்.

வாளுடன் வஞ்சகனைத் தேடித் திரிந்த கண்ணுக்கினியாள், கணவன் மாண்டு கிடப்பதைக் கண்டு கதறி, உடலையெடுத்து அணைக்கும்போது, புறப்புண் கண்டு நாணி வெறுத்தாள். வேழநாட்டு மன்னன், கதிரை வேலனின் வீரப்போரைப் புகழ்ந்து கூறி, கயவன் ஒருவன் வஞ்சகமாக முதுகில் வேலெறிந்து ஓடிவிட்டதையுணர்த்தி, அவளுக்கு ஆறுதல் கூறினான். கண்ணுக்கினியாள் மீண்டும் வாளுடன் வஞ்சகனைத் தேடித் திரிகையில், வஞ்ச நெஞ்ச நரிக்கண்ணன், தங்கையையும் வஞ்சகமாகக் கொன்று வீழ்த்தி விட்டான்.

வேழநாட்டுப் படை கதிர்நாட்டு அரண்மனையுள் புகுந்தது. அன்னத்தை, ஆத்தாள் நிலவறை (சுரங்கப்பாதை) வழியாக அழைத்துச் சென்று காத்தாள்.

நரிக்கண்ணன், கதிர் நாட்டு உரிமைப் பட்டயம் அடங்கிய பாண்டியன் பரிசாம் பொற்பேழையைத் தேடியெடுத்துத் தன் ஆளிடம் கொடுத்துத் தேர்ப்பாகனிடம் கொடுக்கச்

சொன்னான். திருடர் தலைவன் வீரப்பன் மாறுவேடத்தில், பொற்பேழையைப் பறித்துச் சென்று மலையில் மறைத்து வைத்துவிட்டான்.

கதிர்நாட்டரசனாவதற்காக, தங்கையின் கணவனையும், தங்கையையும் இரக்கமின்றி வஞ்சகமாகக் கொன்ற கயவன், அன்னத்தையும் கொல்ல ஆட்களை ஏவினான். அன்னத்தைப் பல இடங்களிலும் தேடிய கயவனின் கையாட்கள் இறுதியாக ஆத்தாளின் இல்லத்தைச் சூழ்ந்தனர். கணக்காயரால் ஏவப்பட்ட வேலன், ஆட்டு மந்தையில் வேங்கை பாய்ந்ததுபோல், கயவர்களிடையே பாய்ந்து போர் செய்தான்.

ஆத்தாள், தன் மகன் வேலன், தங்களைக் காக்க வந்து போர் செய்வதையறிந்து, அன்னத்திற்கும் உணர்த்தி, மாறுவேடத்துடன், அவளை அழைத்துக்கொண்டு தப்பிச்சென்று, கணக்காயர் சீனியை அடைகின்றாள். வேழ நாட்டு மன்னனுக்கு, நரிக்கண்ணன் வஞ்சகத்தையுணர்த்தி, அன்னத்தையும், ஆத்தாளையும் காக்க வேண்டி, கணக்காயர் அவர்களை அழைத்துச் செல்கிறார்.

நரிக்கண்ணன் வஞ்சகச் செயல்களை ஏற்கெனவேயறிந்த வேழமன்னன், அவனைக் கண்டிக்கும் பொழுது, அவன் பொய் பலகூறி, நீலிக்கண்ணீர் வடித்து, நல்லவனைப் போல் நடித்து நம்ப வைத்தான். நடிப்பை உண்மையென நம்பிய வேழமன்னன், நரிக்கண்ணனைக் கதிர்நாட்டு மன்னனாக்கித் தனி மண்டபத்தேயிருந்தான்.

கணக்காயர் முதலியோர், வேழமன்னனை அடைந்து, முழு உண்மையையும் விளக்கிக் கூறினர். நரிக்கண்ணனின் ஒவ்வொரு வஞ்சகச் செயலையும், ஆத்தாள் மாறுவேடத்துடன் அருகிருந்து கவனித்து வந்ததைக் கூறி விளக்கினாள். யாவற்றையும் அறிந்த வேழமன்னன் நடைபெற்ற கொடுமைகளுக்கு வருந்தி, அவர்களைக் காக்க உதவியளிக்கிறான். அன்னம், பாண்டியன் பரிசின்

விவரத்தையும் அடையாளத்தையும் கூறித் தேடித்தரச் சொல்கிறாள். மன்னன் படைவீரர்களை அனுப்புகிறான். ஆத்தாளும் அன்னமும் மாறுவேடத்துடனேயே அவர்கள் பின் செல்கின்றனர்.

அரண்மனையெங்கும் தேடியும், பொற்பேழை கிடைக்கவில்லை. அங்கிருந்து தப்பியோடிய ஒருவனை ஆத்தாள் துரத்திச் சென்று, அவன் கணுக்காலை வெட்டினாள். அவனும், அவளது இடக்கையை வெட்டினான். அருகருகே வீழ்ந்த இருவரும் புலம்பும் பொழுது, வீரப்பனும், ஆத்தாளும் ஆகிய அவர்கள், பல ஆண்டுகளுக்கு முன் பிரிந்த கணவனும் மனைவியுமென அறிந்து மகிழ்ச்சியும் வருத்தமும் கொள்கின்றனர். நகர்ந்து தனியிடம் சென்று கலந்துரையாடுகின்றனர். பாண்டியன் பரிசு தன்னிடம் பாதுகாவலாக இருப்பதையும், அரசியல் குழப்பம் தீரும்வரை மறைவாக இருக்க வேண்டுமென்றும், குழப்பம் தீர்ந்தபின் அன்னத்திடம் ஒப்படைக்கலாம் என்றும் வீரப்பன் உணர்த்துகிறான். ஆத்தாள், தன் கணவன் தீச்செயலைவிட்டு, தான் ஈடுபட்டிருக்கும் நற்செயலிலேயே ஈடுபட்டு இருப்பதையறிந்து மகிழ்கிறாள். வீரப்பன், தன் மகன் வேலனையும் அன்னத்தையும் காணமுடியா நிலைக்கும், தங்களின் வெட்டுண்ட நிலைக்கும் வருந்துகிறான். அங்கிருந்து இருவரும் தப்பிச் செல்கின்றனர்.

வேழ மன்னன், நரிக்கண்ணனை அழைத்துக் கண்டித்து, பாண்டியன் பரிசும் ஆத்தாளும் எங்கே என்று கேட்டான். கயவன் மீண்டும் பொய் பல கூறி நடித்துத் தனக்கு எதுவும் தெரியாது எனக் கூறினான்; தன் மகன் பொன்னப்பனுக்கு அன்னத்தை மணம் செய்து வைத்துக் கதிர்நாட்டை ஒப்படைக்க வேண்டினான்.

மன்னன், அன்னத்தின் விருப்பதைக் கேட்க, அவள், தனக்குரிய பாண்டியன் பரிசைத் தேடிக் கொடுப்பவரை

மணப்பதாக உறுதி மொழிந்து, இச்செய்தியை முரசறைவிக்கும்படியும், தனக்குப் பாதுகாவல் கொடுக்கும்படியும் வேண்டுகிறாள். மன்னனும், அச்செய்தியை முரசறைந்து நாட்டு மக்களுக்கு அறிவிக்க ஆணையிட்டு, அன்னத்திற்குத் தக்க பாதுகாப்பும் கொடுக்கிறான்.

அன்னம், தனியிடத்தில் நிலவொளியில், தன் தோழி நீலியிடம் தன் துயரங்களை மொழிந்து கொண்டிருந்தாள்; தனக்காக, ஆத்தாளும் வீரப்பனும் கை, கால் வெட்டுண்ட நிலையைக் கூறி வருந்தினாள்; தான் நேரில் பார்த்தறியா விட்டாலும், தன்னலமற்ற வீரச் செயல்களால், செவிவழி தன்னுள் புகுந்துவிட்ட வேலன், பொது நலத்திற்காகப் போரிட்டு நெற்றியில் வெட்டுண்ட செய்தியையும், பாண்டியன் பரிசு கிடைக்காததையும் கூறி வருந்தினாள்.

அப்பொழுது, நரியின் மகனும், பிறர் சிரிக்க உடலெடுத்த கிறுக்கனுமாகிய பொன்னப்பன் அங்கு வந்தான்; அன்னத்திடம் மோகங்கொண்டு காதல் கிறுக்கு மொழிகள் பல பேசி அங்கேயே குரட்டையும் விட்டான்.

அதே இரவில் நரிக்கண்ணனும் அமைச்சனும் தனியிடத்தில் பேசிச் சூழ்ச்சித் திட்டம் வகுத்தனர். பாண்டியன் பரிசைக் கவர்ந்து சென்ற கள்வன், கள்வர்கள் இருக்கும் மலையில்தான் எங்கேனும் புதைத்து வைத்திருப்பான் என்றும், பகைவர்கள் அதைத் தேடா வண்ணம் பூதச் செய்தியைப் பரப்பி விட்டு, தன் ஆட்கள் மட்டும் தேடும்படியாகச் செய்ய வேண்டும் என்றும் நரியன் சூழ்ச்சியுரைத்தான்.

மறுநாள் விடியற்காலையில், நரியின் ஆளொருவன் பூத வேடமிட்டு மலை மீதேறிப் பெருங் கூச்சலிட்டான். கண்டாரும் கேட்டாரும் அஞ்சியோடினர். பூதச் செய்தி நகரெங்கும் பரவியது. பாண்டியன் பரிசைத் தேடும் வேலையில் பொது மக்கள் ஈடுபடவில்லை. நரியின் ஆட்கள் அதைத் தேடும் வேலையில் ஈடுபட்டனர். பூதக் கதையும் வளர்ந்து பரவிக் கொண்டிருந்தது.

அமைச்சன் மகன் நீலனும் ஆசைப் பெருக்குடன் தனியே தேடினான். கணக்காயர் சீனி, வஞ்சகத்தை வீழ்த்த தம் மாணாக்கர்களையேவிக் குறிப்பிட்ட இடங்களில் தேடச் செய்தார்.

அன்னம், தன் பெற்றோரையும் நாட்டு நிலையையும் எண்ணித் துயரத்தில் மூழ்கியிருந்தாள், தோழி நீலி, அன்னத்தின் துயரைக் குறைக்கக் கருதிச் செய்யாற்றில் படகில் நீந்திக் களிக்க அழைத்துச் சென்றாள். இரு மாலைகளைத் தாங்கும் தாம்பாளத் த ட்டுப்போல, இரு பெண்களைத் தாங்கிய படகு செய்யாற்றில் சென்று கொண்டிருந்தது. அவர்கள் மாலை வானத்தின் இயற்கையழகைக் கண்டு களித்த வண்ணம் படகில் சென்று கொண்டிருந்தனர்.

திடீரென வானம் இருண்டு, மின்னி, இடித்துப் பெருமழை பொழிந்து, ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுக்கிறது! படகு வெள்ளத்தில் சிக்கித் தவிக்கிறது! பெண்கள் கூச்சலிடுகின்றனர்.

எதிர்க்கரையில் குடிசையிலிருந்த வேலன், இரு பெண்கள் ஆற்று வெள்ளத்தில் தவிப்பதைக் கண்டு, அவர்களைக் காக்கத் தாயிடம் விடை கேட்கின்றான். 'நட' என்கின்றாள் தாய். அவன் விரைந்து வெள்ளத்தில் நீந்தி, மயங்கிய பெண்களை இருதோள்களிலும் சுமந்து குடிசையில் சேர்க்கிறான். அவர்கள் அன்னமும் நீலியுமாக இருப்பதையறிந்து ஆத்தாள் துயரத்துடன், மயக்கந்தெளிவித்து வேண்டிய உதவிகள் செய்கிறாள். அன்னத்தையும் வேலனையும் ஒருவர்க்கொருவர் அறிமுகஞ் செய்து வைக்கிறாள். வேலனை முதன் முறையாகக் கண்டுகளித்த அன்னம், "வாய்த்தீரே மானத்தை உயிரைக் காக்க! மறப்பரிது நும் நன்றி!" என்றாள்.

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாகிய அந்நல்லோன், பொது நலத்திற்கு உயிரும் விடத் தயாரென்றும் இன்னும் ஏதேனும் உதவி தேவையிருந்தால் செய்வதாகவும்

கூறுகிறான். அன்னம், பாண்டியன் பரிசின் அடையாளங்களைக் கூறி, அதைத் தேடித் தருமாறு வேண்டுகிறாள். வேலன், "பேழையினைக் கொண்டு வந்து தருவேன்; அன்றிப் பேருலகில் உயிர் வாழேன்" என்று உறுதி மொழிகின்றான்.

நரியின் அமைச்சன் மகன் 'நீலன்' என்பவன் சூழ்ச்சியும் சுயநலமும் மிக்கவன்; பாண்டியன் பரிசு மூலம் அன்னத்தையும், கதிர் நாட்டையும் பெறும் ஆசையுடையவன்; நீலியைச் சந்தித்துப் பொய் பல பேசி, அவளைக் காதலிப்பதாகவும், அன்னத்திற்கு நன்மை செய்ய விரும்புவதாகவும் நடிக்கின்றான். அவனுடைய பசப்பு மொழியையும் காதல் மொழியையும் நம்பி ஏமாந்த நீலியிடம் சூழ்ச்சியாகச் சில விவரங்களையறிந்து மீண்டான்.

நரியின் ஆட்கள், திருடர்கள் தங்கியிருக்கும் தென்மலை, அதனைச் சூழ்ந்த காடு, மேடு எல்லாம் தோண்டித் தோண்டி, பாண்டியன் பரிசைத் தேடினார்கள். நரிக்கண்ணன் மேற்பார்வையிட்டும் கண்டாரை அதட்டிக் கேட்டுக் கொண்டுந் திரிந்தான்.

ஒரு துறவியின் யோசனைப்படி வேலனும் அன்னமும் பூதத்திற்கு எதிர்ப்பூதம் ஏவினார்கள்; ஆள் மேல் ஆள் ஏற்றி ஈராள் உயரமுடைய பூத வேடமிட்டு, இங்ஙனம் பல பூதங்களைத் தயார் செய்து எல்லாத் திசைகளிலும் அனுப்பினர். நரியும், அவன் ஆட்களும் பெரும் பூதத்தைக் கண்டு, உண்மைப் பூதமென நம்பி அஞ்சி ஓடினர்! ஓடும் திசையெல்லாம், காணுமிடமெல்லாம் பெரும்பூதம்! அரண்மனைக்குள் புகுந்தால் அங்கும் பெரும்பூதம்! அரண்மனையை விட்டும், நகரை விட்டும் ஓடி விட்டனர்.

அன்னமும் வேலனும் அரண்மனையில் காதல் மொழி பேசியும், துறவியின் உதவியால் விரைவில் பாண்டியன் பரிசு கிடைத்து விடும் என நம்பியும் மகிழ்ந்திருந்தனர்.

நீலன் மீண்டும் நீலியை வஞ்சித்துத் துய்த்து, பெரும்பூத ஏமாற்றையும் அறிந்து கொண்டான். ஆனையூர்ப் பள்ளியில் தன் ஆட்களுடன் தங்கியிருந்த நரியிடம் நீலன் சென்று பெரும் பூத ஏமாற்றை விளக்கினான். அன்றிரவு அனைவரும் பூத வேடமிட்டு அரண்மனை நோக்கி வருமாறு யோசனை கூறினான். திரும்பி வந்து, அன்னம் வேலன் குழுவினரிடமும், நரியின் ஆட்கள் பூத வேடத்துடன் வரப்போவதைக் கூறி விட்டான் அவர்கள் அவனுக்கு நன்றி கூறிவிட்டு, அவன் தந்தையைக் கொல்லாதிருக்க அடையாளங் கேட்டனர். அவன் தந்தை இடக்கையில் வேப்பிலை வைத்திருப்பான் என்றும் நரியன் தலையில் மாம்பூ வைத்திருப்பானென்றும் அடையாளங் கூறிச் சென்றான்.

உடனே, அவர்கள் தம் வீரர்கட்குச் செய்தியனுப்பி வரவழைத்தனர். அன்னம் வேழமன்னனைச் சந்தித்து, பூதச் செய்தியால் நகர மக்கள் படுந்தொல்லைகளையும், அன்றிரவு, நூறு பூதங்களின் படையெடுப்பையும் கூறி, அப்பூதங்களையொழிக்க அனுமதி பெற்று வந்தாள்.

அன்றிரவு, பூதங்களையழிக்க வேலன் தலைமையில் வீரர்கள் தயாராக இருந்தனர். அன்னமும் ஆவலுடன் காத்திருந்தாள்.

பூதங்கள் வந்து கூச்சலிட்டு ஆர்ப்பரித்தன. தன் பெற்றோரை வஞ்சமாக அழித்த நரிக் கண்ணன் தலையை மாம்பூவால் அடையாளங் கண்டு, பனங்காய் வீழ்த்துவதுபோல், அன்னம் வெட்டி வீழ்த்தினாள்.

வேலனும் ஏனையோரும், வேப்பிலைப் பூதத்தைவிட்டு, ஏனைய பூதங்களைக் கொன்று, பிணங்களை வரிசையாக அடுக்கி வைத்தனர். மறுநாள் காலை நகரத்தார், பிணங்களைப் பார்த்து, வஞ்சக மானிடரே பூதவேடமிட்டு அச்சம் விளைவித்தனர் என உணர்ந்து பூத அச்சம் தெளிந்தனர். வேழ

மன்னன், தன் படைத் தலைவன் முடிவிற்கு வருந்தினாலும், அவனது வஞ்சகச் செயலுக்கேற்ற முடிவே என உணர்ந்து தெளிந்தான்.

பன்னாட்களாகியும் பாண்டியன் பரிசு கிடைக்காததால், "இன்னும் ஒரு வாரத்தில் பாண்டியன் பரிச கிடைக்காவிட்டால் கதிர் நாட்டாட்சி, என் மருமகன் 'மாழை' என்பவனுக்கு உரிமையாக்கப்படும்" என்று வேழ மன்னன் முரசறைவித்தான் அன்னமும் வேலனும் துயருற்றனர்.

நான்கு நாட்கள் கழிந்த பிறகு, 'மறுநாள் வேலனிடம் பாண்டியன் பரிசு அடங்கிய பொற்பேழை சேர்க்கப்படும்' எனத் துறவியார் அறிவித்தார். நீலன் வஞ்சகத்தை அறியாத நீலி, இதையும் அவனுக்குத் தெரிவித்து விட்டாள்.

மறுநாள், வேலன் பாண்டியன் பரிசுடன் கையில் வாளேந்திக் குதிரை மீதமர்ந்து வருகிறான். அவனைச் சூழ்ந்து கணக்காயர் மாணவர்களும் வீரப்பன் ஆட்களும் துணைக்கு வருகின்றனர்.

நீலனது ஆட்கள் ஏராளமான பேர், அவர்களையெதிர்த்துப் பாண்டியன் பரிசைப் பறிக்க முயன்றனர். அறத்திற்கும் மறத்திற்கும் தொடர்ந்து போராட்டம் நடைபெறுகிறது! வேலன் அரும்பாடுபட்டுப் பேழையை உயிரெனப் போற்றி, காடு மேடு கடந்து முன்னேறிக் கொண்டிருக்கிறான். இரவு நெருங்கியது.

ஆத்தாளும் அன்னமும் துயருடன், ஆத்தாள் குடிசையில் படுத்திருந்தனர். விடியற்காலையில் எழுந்து பார்க்கும் பொழுது அன்னத்தைக் காணாமல் ஆத்தாள் திகைத்தாள். இரத்தக்கறை கண்டு திடுக்கிடுகிறாள்! நீலி ஓடிவந்து அன்னம் கொல்லப்பட்டு, இடுகாட்டில் புன்னை மரத்தடியில் புதைக்கப்பட்டதாகக் கூறிக் கதறி அழுகிறாள் ஆத்தாளும் துயரம் தாங்காமல் கீழே விழுந்து புரண்டு கதறுகிறாள்!

பேழையுடனும் பேராவலுடனும் வந்த வேலன், நிலை கண்டு, கதறி இடுகாட்டிற்கு ஓடுகிறான்! "தனித்தினிக்கும் இசைத் தமிழில் தேனுங்கூட்டி வடித்தெடுத்த மொழியாளே!" "பிரிக்க முடியாத உயிர்ப் பொருளே!, கண் திறந்து காணோயோ!" எனக் கதறியழுகிறான்.

இறுதியாக முகத்தைக் காணப் பிணத்தைத் தோண்டியெடுக்கிறான். நிலவொளியில், அழுகி, ஊன் கழன்று, பல்லிளித்த முகத்தைக் காண்கிறான். அருவருப்புடன் தூக்கியெறிந்து விட்டு, முற்றுந்துறந்த ஞானிபோல், யாக்கை நிலையாமை பற்றியும், யாக்கையின் இழிவு பற்றியும் பேசுகிறான். பெண்ணுலகையே பழித்துப் பேசுகிறான்.

அப்பொழுது அன்னம் பின்னால் நின்று பேசுகிறாள்! திரும்பிப் பார்த்த வேலன், அளவற்ற வியப்பும் மகிழ்ச்சியும் கொள்கிறான், இருவரும் கலந்து பேசி, நடந்தவை யாவும் நீலனது சூழ்ச்சித் திட்டங்கள் என உணர்ந்தார்கள்.

வேலன், பாண்டியன் பரிசைக் கொடுத்தான். அன்னம் திறந்து பார்த்துப் பெருமகிழ்வு கொண்டு,

"முகந்தாழ்த்திக் கால் விரலால் தரையைக் கீறி

முடிந்தது சூள்; கடி மணந்தான் மிச்சம்"

என்றாள்.

"பெண் இதழ்தான் கன்னலின் சாறென்கிறார். மெய்யா?" என்றான் வேலன். அன்னம் "காணீர் என உளங்கனிந்தாள்."

"தென்றல் இருவருக்கும் நடுச்செல்ல விடாதீர்" என்றாள்.

அனைவரும் ஒன்று சேர்ந்தனர். வேலன் தந்தையாகிய வீரப்பன்தான் துறவி வேடத்தில் வந்து பாண்டியன் பரிசு கிடைக்கச் செய்தார் என்ற உண்மையும் வெளிப்பட்டது.

வேழ நாட்டரசன், முரசறைந்து நாட்டு மக்களைக் கூட்டினான். "அன்னம் வேலன் திருமணமும் இது என்றான்! கதிர் நாட்டாட்சித் திருமுடியும் இது என்று புனைந்தான் நன்றே!"

தமிழ்ச் சான்றோரும் ஏனையோரும் வாழ்த்திசைத்தனர்.

# 4. சுவையின்பம்

சுவையென்றால் என்ன? நாவிற்கு இன்பந் தருவது மட்டுந்தான் சுவையா? அன்று. மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளுக்கும் இன்பந்தருவனவெல்லாம் சுவையே. 'சுவை' என்பது பொதுப்பெயர்.

**செவியின் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்**
**அவியினும் வாழினும் என்? -குறள் 420**

என்று தெய்வப் புலவர் திருவள்ளுவர், செவிக்கு இன்பந்தருவதைச் 'செவியின் சுவை' யெனக் கூறுவதை நோக்குக. கண்ணுக்கின்பந் தருவது காட்சிச் சுவை. செவிக்கின்பந்தருவது செவிச்சுவை – கேள்விச்சுவை. மூக்கிக்கின்பந்தருவது மோப்பச் சுவை. உடலுக்கு இன்பந்தருவது ஊற்றுச்சுவை. நாவிற்கு இன்பந்தருவது நாச்சுவை. இவையெல்லாம் துய்க்கும் போது மட்டும் இன்பூட்டிப் பின் மறையக் கூடியவை; நிலையற்றவை, நிலையான சுவை எது? இலக்கியச் சுவை: கற்றுச் சுவைக்கும்போது மட்டுமின்றி, நினைக்குந்தோறும், சொல்லுந் தோறும் இன்பமூட்டும் நிலையான சுவை இலக்கியச் சுவையே! இந்த இலக்கியச் சுவையை எட்டுவகைப்படுத்திக் கூறுவர் தமிழ்ச் சான்றோர்.

**நகையே அழுகை இளிவரல் மருட்கை**
**அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று**
**அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப-தொல் 1197**

என்று ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர் கூறுகின்றார். உள்ளத்துணர்வு உடலில் வெளிப்பட்டுத் தோன்றுவதால்–மெய்யில்பட்டு விளங்குவதால்– 'மெய்ப்பாடு' எனப்படும். இவற்றுடன், அமைதி நிலை (சாந்தம்) என்பதைக் கூட்டி ஒன்பது என்பது வடநூலார் மரபு.

எட்டுவகை மெய்ப்பாடுகளுக்கும் நன்னான்கு அடிப்படைகளைத் தொல்காப்பியர் காட்டுகின்றார். அவற்றை அவ்வப்போது காண்போம்.

இவையேயன்றி, சொற்சுவை, பொருட் சுவை, உவமை, உருவகம் முதலிய அணிச்சுவை முதலியனவும் தலைசிறந்த இலக்கியத்தில் தோன்றி விளங்கிக் கற்பாருக்கும், சொல்வாருக்கும் கேட்பாருக்கும் இன்பம் ஊட்டுவனவாம். இவையாவும் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் நிறைந்து விளங்கும் நிலையைக் கற்றோர் உணர்வர்.

பாண்டியன் பரிசு: –இருபதாம் நூற்றாண்டின் தலைசிறந்த தமிழ்க் கவிஞர்களுள் ஒருவராகிய புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் படைத்த 'பாண்டியன் பரிசு'தமிழ் இலக்கிய உலகிற்குப் பெரும் புத்துயிர் அளிக்கக் கூடியதாகும். மொழிப்பற்று, நாட்டுப்பற்று, தமழ்ப் பண்பு ஆகியவற்றையூட்டவல்லது! நகைச்சுவை, வீரச்சுவை, அவலச்சுவை, சொற்சுவை, பொருட்சுவை, உவமைச்சுவை முதலிய பல்வேறு சுவைகளை மிகவும் தர வல்லது!

இனிப் , பாண்டியன்பரிசு தரும் பல்சுவையின்பங்களை நுகர்வோம்.

## 5. வீரச்சுவை

காப்பியமே வீரச் சுவையில் தொடங்குகிறது. நாமும் வீரச்சுவையில் தொடங்குவோம். வீரத்தைப் 'பெருமிதம்'' என்பர் தமிழ்ச் சான்றோர். பெருமிதத்தின் அடிப்படைகள் யாவை?

**கல்வி தறுகண் இசைமை, கொடையெனச்**
**சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே.**

– தொல் – 1203.

(தறுகண் = அஞ்சாமை, இசைமை=புகழ்)

என்பது தொல்காப்பியம். கல்வி, அஞ்சாமை, புகழ், கொடைக்குணம் ஆகிய நான்குள் ஒன்றோ பலவோ மிக்கவரே பெருமித வாழ்வு வாழ முடியும். காப்பியத் தலைவர்களாகிய அன்னம், வேலன் ஆகிய இருவரும் இந்நான்கும் மிக்கவரே. ஆயினும், தீமை கண்டு அஞ்சாது எதிர்த்துப் போரிடும் தறுகண்மையாகிய வீரமே மிகுதியும் போற்றப்படுகிறது. "பேராண்மை யென்ப தறுகண்" என்பது தமிழ்மறை.

## 1

அன்னத்தின் பெற்றோரது தறுகண்மைப் பெருமிதம் முதலில் கூறப்படுகிறது.

கதிர் நாட்டின் மன்னன் கதிரை வேலனும் அவன் காதல் மனையாள் கண்ணுக்கினியாளும் சதிராடு கூடத்தில் தமிழ்ப் பூவால் இசைப்பாக்கள் புனைந்திருந்தார். அப்பொழுது வேழநாட்டுப் படைகள் கதிர் நாட்டை நோக்கி வருஞ் செய்தியைப் படைத்தலைவன் வந்து கூறுகின்றான். இப்பொழுது கதிரைவேலன் கண்ணுக்கினியாள் உரையாடலைக் கவிதை வாயிலாகவே நோக்குவோம்.

**என்கண்ணுக் கினியாளே! அன்பே! உன்றன்**
**எழில் அண்ணன்நரிக்கண்ணன், வேழ நாட்டில்**
**வன்மையுறு படைத்தலைவ னாயிருந்தும்**
**வேழர்படை வருவதை, ஏன் என்னிடத்தில்**
**முன்னமேயே சொல்லவில்லை வேழ நாட்டான்**
**முழுதும்நமை ஆதரிப்ப தாக அன்றோ**
**சொன்னான்? இந்நாட்டினிலே நம் படைகள்**
**தோதில்லா திருக்கையிலே நமை எதிர்த்தார்!**

இந்நாட்டை உன் அண்ணன் பெற நினைத்தான்
என்படையின் தளர் நிலையை, அவனையல்லால்,
பின் எவரும் அறியாரே! உடன் பிறந்தான்
பெரும் பகைவன் எனக்கு! நெடு வையமீதில்
என் ஆவி போன்றவள் நீ! என்ன செய்வேன்!
என்வெற்றி உன் துன்பம் அன்றோ பெண்ணே!
மன்னவன் நான்! எனை நம்பி வாழுகின்ற
மக்கட்கோ என் கடமை ஆற்ற வேண்டும்!

கதிரை வேலனின் வீரநெஞ்சம் மைத்துனனின் சூழ்ச்சியை யெண்ணி வருந்துகிறது. அப்பொழுது கண்ணுக்கினியாள் வஞ்சக அண்ணன் மீது கொதித்தெழுகிறாள்.

நெடு விழியில் கனல் சிந்த அரசி சொல்வாள்:

முன் ஒருநாள் என் அண்ணன் இங்கு வந்தான்
ஏதோ மொழிந்திட்டான் என்னிடத்தில்!
அன்ன வற்றின் பொருள்இந்நாள் அறியலாமேனன்
அழகியஎன் திருநாட்டை அவன் பறிக்கத்

திட்டமிட்டான்! மணவாளா! உன்றன் ஆணை!
திருநாட்டின் மீதாணை! இந்நாட்டின் கண்
மட்டற்ற மகிழ்ச்சியுடன் வாழுகின்ற
மக்கள்மேல் எனக்குள்ள அன்பின் ஆணை!

விட்டேனா அன்னவனை! அண்ணன் அல்லன்!
விரைவினிலே போர்க்களத்தை அடைவேன்! எந்த
வட்டத்தில் அவனுண்டோ அங்கன் னோனை
மாய்த்திடுவேன்! அல்லது நான் அவனால் மாய்வேன்!

என் அண்ணன் இந்நாட்டில் நுழைவ தாயின்
என்னுயிரில் நுழைந்தபின் நுழைக! நானோ
அன்னவனின் உயிர்குடித்த தன்பின் னரேஇவ்
அரண்மனையில் அகத்தூய்மை நிரம்பப் பெற்றே

**என் கால்வைப் பேன்உறுதி என்றாள்; ஓடி**
**எதிரில் உறுபடைவீடு சென்று மீண்டே**
**என் அண்ணன் எங்குள்ளான் அங்கே செல்க**
**என்றாள்; தேர் ஏறினாள்; எரியுங் கண்ணாள்!**

அண்ணன் என்றும் பாராமல், வஞ்சத்தையெதிர்த்துப் போரிடத் துணிந்த கண்ணுக்கினியாளின் வீரநெஞ்சமும், அவள் சூளுரையில் வெளிப்படும் காதல் நெஞ்சமும் நாட்டுப் பற்று, மக்களன்பு ஆகியனவும் கற்போரை வியக்க வைக்கின்றன.

பாரதப் போர்க்களத்தில், பங்காளிகளோடு போரிட அர்ச்சுனன் உள்ளம் தயங்குகிறது. அவனது உள்ளத்தைத் தெளிவிக்க, கண்ணனது நெடிய அறிவுரை தேவைப்படுகிறது.

ஆனால், யாருடைய தூண்டுதலுமின்றி, அறத்தை நிலைநாட்டுவதற்காக, ஒரு பெண் உடன்பிறந்த அண்ணனையே எதிர்த்துப் போரிடத் துணிகின்றாள்.

புதுமைப் பெண்ணுலகைக் காணத் துடித்த பாரதியின் தாசனார், தம் காப்பியங்களில் எல்லாம் பெண்மைக்கே முதலிடந் தந்து பாடியுள்ளார். இக்காப்பியத் தலைவியும் 'அன்னம்' என்னும் பெண்தான்.

கதிரைவேலன், வீரமங்கைக்குத் துணையாக ஒரு படையை அனுப்பினான். "தணல் சிந்தும் விழியாலே நாற்புறத்தும் தமிழ் மறவர் தமையேவித் தெற்குக் கோட்டை மணிவாயில் தனையடைந்தான் சிங்கத்தைப் போல்!"

இளவரசி அன்னம் சோலையிலிருந்து அரண்மனைக்கு வந்தவுடன் நிலைமையறிகிறாள்! போர்க்குரலைக் கேட்கிறாள்! அவள் தமிழ் நெஞ்சம் கொதிக்கிறது!

**"கிளியுதடு கனல் சிந்தும்! துடிக்கும்! அஞ்சும்!**
**வாட்போரை விரும்பும் அவள்தமிழ் நெஞ்சம்!**
**வகையறியா அவள் இளமை மறுத்து நிற்கும்!"**

இளமை – கன்னித்தன்மை – போர்க்களஞ் செல்லாமல் தடுக்கிறது! என் செய்வாள்!

## 2

வேழநாட்டுப்படை பெரும்படை. கதிர்நாட்டுப்படை சிறிய படை. நூற்றுக்கு ஒருவர் வீதம் கதிர்நாட்டார் வீரப்போர் செய்கின்றனர்.

வேழ மன்னனும் கதிர் மன்னனும் தனிப்போர் செய்கின்றனர். வேழ மன்னன் வாள்வீச்சுகளுக்குக் கதிர் மன்னன் தக்கவிடை கொடுக்கிறான். கதிர் மன்னன் வாள்வீச்சுக்களுக்கு வேழ மன்னன் தக்கவிடை கொடுக்கிறான். சாவு இருவரிடமும் மாறி மாறி நொடிக்கு நொடி நெருங்கி ஏமாறுகிறது 'வெற்றி மங்கை நூறுமுறை ஏமாந்தாள் ஆளைத்தேடி' இங்ஙனம் 'வாள் போருக்கு இலக்கியத்தை நல்கும் போதில், வஞ்சக நரிக்கண்ணன், முகமூடியாலும் கரிய போர்வையாலும் உடலை மறைத்துக் கொண்டு, பின்புறம் வந்து வீரக்கதிரை வேலன் முதுகில் வேல்பாய்ச்சி மறைகிறான். வீரச்சிங்கம், குள்ளநரியின் வஞ்சகத்தால் வீழ்த்தப்படுகிறது!

வீரமங்கை கண்ணுக்கினியாள், எதிர்த்தோரைக் கொன்று குவித்த வீரவாளுடன், வஞ்சக நரியைத் தேடித் திரியும் பொழுது, தன் காதற் கணவன் போர்க்களத்தில் வீழ்ந்து கிடப்பதைக் காண்கிறாள்! கதறிக்கொண்டு உடலையெடுத்து அணைக்கும்போது, முதுகில் வேல்பாய்ந்த புண்ணைக் கண்டு திடுக்கிடுகிறாள்! உயிர்த் துணைவன் இறப்பைவிட, புறப்புண்ணுக்கே அதிகம் வருந்துகிறாள் தமிழ் வீரமங்கை!

**அணைத்திட்டாள்! மலர்க்கையால் கன்னம் உச்சி**
**அணிமார்பு தடவினாள்! ஈட்டியாலே**
**தணல்போலும் புண்பட்ட முதுகு கண்டாள்,**
**தலைகுனிந்தாள்! அப் பிணத்தை நிலத்தில் போட்டாள்.**

இணைபிரியா மானமதும் எம்மை விட்டே
ஏகிற்றோ ஐயகோ! முதுகு காட்டத்
துணிந்ததுவோ தமிழாநின் தமிழ் நெஞ்சம்!
தூயநின் முதாதை, என் முதாதை
அனைவருள்ளும் எவரேனும் பகைவன் வாளை
அருமார்பில் முன்தோளில் ஏற்ற தின்றித்
தினையளவும் திரும்பிப்பின் முதுகில் ஏற்ற
சேதியினை இவ்வையம் கேட்ட துண்டோ?

என்று கேட்டுப் புலம்பும்பொழுது, வேழநாட்டரசன் மனமிரங்கி, நடைபெற்ற நிகழ்ச்சியைக் கூறி, கதிரை வேலனின் பெருவீரத்தைப் பாராட்டி, அவளுக்கு ஆறுதல் கூறி அரண்மனைக்குப் போகச் சொல்கின்றான்.

"மண்டமர்க்கு உடைந்தனன் ஆயின், உண்டஎன்
முலை அறுத்திடு வென்,யான்" - (புறம்) - 278

என்ற புறநானூற்றுத் தாய்க்கு இணையாகக் கண்ணுக்கினியாள் விளங்குகிறாள்.

அவள் வீறுகொண்டெழுந்து, பழி தீர்க்கும் நோக்குடன் வாளேந்தித் திரிகிறாள். இரக்கம் அற்ற கொடிய நச்சுப் பாம்பன்ன நரியன், தன் தங்கையையும் வஞ்சகமாக வீழ்த்தி விடுகிறான். அந்தோ! இரண்டு வீரத் தமிழ் நெஞ்சங்கள் வஞ்சகத்திற்குப் பலியாகி விட்டன!

வேலன், அவ்வவ்போது வீரப்போர் செய்து, பகைவரை வீழ்த்தி இறுதியில் வெற்றி பெறுகிறான். அன்னமும், வஞ்சக நரிக்கண்ணனை வெட்டி வீழ்த்திப் பழி தீர்த்துக் கொள்கிறாள்.

இங்ஙனம், வீரச்சுவை பொங்கி வழியும் காப்பியமாகப் பாவேந்தரின் பாண்டியன் பரிசு திகழ்கிறது. தூங்கிக் கிடக்கும் தமிழ்ச் சமுதாயத்தைத் தட்டியெழுப்பத் தேவையான வீரச்சுவையைப் புரட்சிக் கவிஞர், காப்பியம் முழுவதும் தந்துள்ளார்.

# 6. அவலச்சுவை

கற்பாருள்ளத்தைக் கவர்வதில் பேராற்றல் வாய்ந்தது அவலச் சுவையே. நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தில், கண்ணகியின் அவல வாழ்வே கற்பாரையீர்க்கிறது. அவலச் சுவை கலவாத காப்பியமோ, நாடகமோ, திரைப்படமோ வெற்றிபெற இயலாது.

அவலச் சுவையை அழுகைச் சுவையென்பர் தொல்காப்பியர். அச்சுவையின் மூலங்கள் யாவை?

**இளிவே இழவே அசைவே வறுமையென**
**விளிவில் கொள்கை அழுகை நான்கே.**

– தொல் – 1199

(இளிவு = இழிவு. இழவு = இழப்பு; சாவு. அசைவு = தளர்ச்சி. விளிவில் கொள்கை = கேடில்லாத கருத்துகள்).

தன்னிலையில் தாழ்தல் 'இளிவு' ஆகும். தனக்குரிய சிறந்த பொருளையிழத்தலும், அன்பிற்குரியார் இறத்தலும் 'இழவு' ஆகும். உடல் வலி, பொருள் வலி, துணை வலி முதலியன குறைதல் 'அசைவு' ஆகும். அடிப்படைத் தேவைக்குரிய பொருளின்மை 'வறுமை'யாகும். இந்நான்கு காரணங்களால் அழுகையாகிய அவலம் உண்டாகும். பாண்டியன் பரிசுக் காப்பியத்தில் தொடக்கத்திலிருந்து இறுதிவரை அவலச்சுவை விரவி வருகிறது.

எதிர்பாராப் படையெடுப்பைக் கேள்வியுற்ற கதிரைவேலன், எதிரியின் படைவலிமையை விடத் தன்படை வலிமையின் குறைவையெண்ணி வருந்துகிறான். இது அசைவு (தளர்ச்சி) காரணமாக உண்டான அவலமாகும்.

நரிக்கண்ணனால் வஞ்சகமாகக் கதிரைவேலனும் கண்ணுக்கினியாளும் கொல்லப்பட்ட பிறகு, பெற்றோரையும் நாட்டையும், உரிமைப் பட்டயம் அடங்கிய பொற்பேழையையும்

இழந்து அன்னம் படுகின்ற துயரும், செவிலித்தாய் ஆத்தாள் படுகின்ற துயரும் 'இழவு' காரணமாக ஏற்பட்ட அவலமாகும். இழவு காரணமான அழுகையே காப்பியத்தில் நிறைந்துள்ளது. இவ்அவலத்தை வரிசையாக நோக்குவோம்.

# 1

போர்க்களத்தில் கொல்லப்பட்டுக் கிடக்கும் கதிரைவேலனைக் கண்ட கண்ணுக்கினியாள்,

**"...... வீழ்ந்த தோறின்**
**நெடுமேனி! வீழ்ந்ததோ கதிர் நாடிந்நாள்!**
**இலைநீ தான் என அறிந்தால் அஞ்சி வாடும்**
**இந்நாட்டு மக்களை யார் தேற்றுவார்கள்?**
**கலைந்ததுவோ என்காதல் ஓவியந்தான்!"**

என்று புலம்பி அழுகின்றாள். கணவனையிழந்த கற்புடைய பெண்ணின் அவலமிகுதியைக் 'கலைந்ததுவோ என் காதல் ஓவியந்தான்!' என்னுந் தொடர் மிக அருமையாக விளக்குகிறது.

கணவன் முதுகில் வேல் பாய்ந்த புண்ணைக் கண்டு, வீரநிலை தாழ்ந்த இழிவாகக் கருதி,

**"இணைபிரியா மானமதும் எம்மைவிட்டே**
**ஏகிற்றோ? ஐயகோ!.......**

எனக்கதறுவது 'இளிவு' காரணமாக வந்த அவலமாகும். 'ஐயகோ' என்னுஞ் சொல் அவலத்தைப் பிழிந்து தருகிறது.

வேழ மன்னன் உரையால், தன் கணவனது வீரந் தாழவில்லையென அறிந்து, கணவனையும் நாட்டையும் இழந்ததையெண்ணி,

**வாள் தொங்க; வாள்பெற்ற வலக்கை தொங்க**
**வல்லியிடை துவள, மேல் நல்ல தோள்கள்**

ஆட, எடுத்தூன்றும் அடி இடறக் கண்ணில்
அழகிழந்து குழல்சரிந்து வீழ, மங்கை
"நாடிழந்தேன் நலமிழந்தேன் கண்ணில் வைத்து
நாளும் எனைக் காத்து வந்த துணையிழந்து வாடுகின்றேன்"

எனக் கதறி நெஞ்சம் சோர்ந்தாள். இப்பகுதியில் வந்துள்ள வாள் தொங்கல், வாள் பிடித்த வலக்கை தொங்கல், இடை துவளல், தோள்கள் ஆடுதல், காலடி இடறல், கூந்தல் சரிந்து வீழல் முதலியவை அவலச்சுவையை மிகுத்துக் காட்டும் மெய்ப்பாடுகளாகும்.

"வாரணம் பொருத மார்பும் வரையினை யெடுத்ததோளும்
நாரத முனிவற்கேற்ப நயம்பட உரைத்த நாவும்
தாரணி மௌலி பத்தும் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமும் களத்தே போட்டு வெறுங்கையோடு இலங்கைபுக்கான்"

என்னும் கம்பர் பாடலோடு ஒப்பு நோக்குக.

## 2

அன்னம், செவிலித்தாய் ஆத்தாளிடம் தன் துயரங்களை அடுக்கிக் கூறியழுகின்றாள். இவ்வளவு துயரங்களுக்கும் காரணமானவன் தாய்மாமன் என்று எண்ணும்பொழுது, ஏனைய துயரங்களை விட அத்துயரம் மேலோங்கி நிற்கிறது.

ஐயகோ என் ஆத்தா! வையகத்தில்
அன்னை மடிந் தாளென்று சொன்ன சொல்லைத்
தையலெனதுளம் பொறுத் ததுண்டு, மேலும்
தூய்யகதிர் நாட்டுரிமை பேழையோடு
தொலைந்ததையும் பொறுத்த துண்டு, பொறாத தீமை
செய்து வந்தான் என்மாமன் என்றால் இந்தச்
சிறியஉளம் பெருந்துயரைப் பொறுப்பதுண்டோ?

ஆம்! சிறிய உள்ளம் பொறுக்க முடியாத பெரிய துயரம்! அவளையும் கொல்ல அல்லவா தேடித் திரிகின்றான் பாவி!

மிகமிக ஏழையான ஓர் அடிமையின் மகளுக்கும் வரக்கூடாத துயரமல்லவா, நாடாளும் மன்னன் மகளுக்கு வந்துள்ளது. இதோ அவளே கூறுகின்றாள்.

ஊராளும் தலைவனின் குற்றேவல் செய்வோன்
ஒட்டுவிக்கும் சிற்றாளின் கீழ்க் கிடக்கும்
ஓராளின் மகள், தன்னை உவந்து பெற்றோர்
உயிர்துறந்தால் உளந் துடிப்பாள் என்றால், இந்தப்
பாராளப் பெற்றாரை என்பெற்றோரைப்
பறிகொடுத்த என்னுயிரோ உடலில் நிற்கும்?
யாருமில்லை யான்பெற்ற பேறு பெற்றோர்!
இற்றைக்கோ என்போலக் கெட்டா ரில்லை.

இமயத்தினுச்சியிலிருந்து, மடுவின் ஆழத்திற்குத் தள்ளப் பட்டதைப் போல, நாடாளும் மன்னன் மகளாக – இளவரசியாக – இருந்தவள், யாவுமிழந்து அநாதையாகி விட்டாளே! இவளைப்போல் துயருற்றோர் யார்?

கட்டியங்காரன் சூழ்ச்சியால், கணவனையும் நாட்டையும் இழந்து, சுடுகாட்டில் சீவகனைப் பெற்றெடுத்த விசயையின் துயர், அன்னத்தின் துயருக்கு நிகராகலாம்.

“வெவ்வாய் ஓரி முழவாக
விளிந்தார் ஈமம் விளக்காக
ஒவ்வாச் சுடுகாட்டு உயராங்கின்
நிழல்போல் நுடங்கிப் பேயாட
எவ்வாய் மருங்கும் இருந்திரங்கிக்
கூகை குழறிப் பாராட்ட
இவ்வாறு ஆகிப் பிறப்பதோ
இதுவோ மன்னர்க்கு இயல்வேந்தே” சீ-சி.309

என்னும் சீவக சிந்தாமணிப் பாடலை ஒப்புநோக்குக.

# 3

ஆத்தாள், கயவன் நரியின் சூழ்ச்சித் திட்டங்களிலிருந்து அன்னத்தைப் பல நாட்கள் அரும்பாடுபட்டுக் காத்து வந்தாள். இறுதியாக வேலன், அன்னத்தின் எதிர்கால நல்வாழ்வுக்கும், நாட்டின் நலத்திற்கும் இன்றியமையாத பாண்டியன் பரிசைப் பெற்று பகைவரை வென்று திரும்பும் நாள் இரவில், ஆத்தாள், தன் குடிசையில் அன்னத்தைத் தன்னுடன் வைத்துப் படுத்துறங்கிக் கொண்டிருந்தாள். விடியற்காலையில் எழுந்து பார்க்கும்பொழுது, படுக்கையில் அன்னத்தைக் காணவில்லை. அவ்விடத்தில் குருதிக்கரையைக் கண்டு பதைத்து அழுகின்றாள்.

சேயிழையாள் துயில்கிடந்த இடத்தில் தோய்ந்த
செங்குருதி கண்டிட்டாள், ஐயோ என்று
வாயிலிலும் உட்புறத்தும் வெளிப்புறத்தும்
வஞ்சியுடல்தனைத் தேடிக் காணாளாகித்
தூயவளே! அன்னமே! என்று கூவிச்
சொல்லொன்றும் 'செவியினிலே கேளாளாகி
நீயோடி இறந்திட்டாய் எனத் துடித்தாள்!
நீலியவள் அவ்விடத்தில் ஓடிவந்தாள்.

அன்னத்தைச் செங்குருதி சாயக் குத்தி
அழகுடலை இடுகாட்டில் பட்டுப்போக
புன்னையடியில் புதைத்தார்; என்றன் ஆத்தா
போனதடி கதிர்நாட்டின் தேனூற்றென்று
சொன்னபடி துடித்தழுது புரண்டாள் நீலி!
துன்பத்து மலையடியில் புதைந்தாள் ஆத்தா!
சின்னகுடில் செங்குருதி வெள்ளங் கண்டு
சிவக்கின்ற திருவிளக்கும் நடுங்கிற்று அங்கே!"

'துன்பத்து மலையடியில் புதைந்தாள் ஆத்தா' என்னுந்தொடர் அவலச் சுவையின் உச்ச நிலையாகும். ஒரு பெண் கொல்லப்பட்டாள் என்று இருபெண்கள் படுந்துயர்

கண்டும், செங்குருதி வெள்ளங் கண்டும் சிவக்கின்ற திருவிளக்கும் நடுங்கிற்றாம்.

வேலன், அரும்பாடுபட்டுப் பெற்றுக் காத்து மீண்ட பாண்டியன் பரிசுடன், காதலியைக் காணப் பேராவலுடன் குடிசைக்கு ஒடி வருகிறான்! அங்குக் காணும் காட்சி....!

தைக்கின்ற வேல்நூறும் அம்பு நூறும்
சருக்கென்று பாய்ந்ததுபோல் உளந்துடித்தே
ஐயகோ என அலறி என்றன் வாழ்வும்
அழிந்ததடி அன்னமே! என்றிரண்டு
கையாலும் தலைமோதிக், 'கண்ணே உன்றன்
கலக்கத்தைத் தீர்க்குமோர் இலக்கியத்தைப்
பொய்யாத பாண்டியனார் பரிசை உண்மை
புலப்படுத்தும் பட்டயத்தைக் கொண்டுவந்து
வையாயோ என்றாயே வஞ்சி, தூக்கி
வந்தேனே! செந்தேனே! எனக்கேன் பேழை!

எனக் கதறியழுது கொண்டு இடுகாட்டிற்கு ஓடுகிறான். அவன் துயரைக் காணப்பொறாமல் நிலவும் முகிலில் மறைகின்றது. அங்கு, அவன் ஆற்றாதுஅழுது புலம்புவதை எழுவிருத்தங்களில் விளக்குகிறார் கவிஞர். அவற்றுள் சிலவற்றை நோக்குவோம்.

பிறக்கமுடி யாதுஇனிமேல் பெண்ணொருத்தி
பிரிக்கமு டியாதஉயிர்ப் பொருளே! நெஞ்சம்
மறக்க முடியாத எல்லாம் பேசி, இன்ப
வாழ்க்கையெனும் கடற்கரையின் ஒட்டில் நானோ
சிறக்க ஒரு முறையேனும் மூழ்கவில்லை!
சேயிழையே! தீங்கனியே! அந்தோ நீதான்
இறப்பதுவோ! திருவிளக்கே! இந்த வையம்
இறக்கவில்லை எனில் எனக்கு இங்கென்ன வேலை!

அரசியல் குழப்பச் சூழ்நிலையில் – போர் நடக்கும்

நிலையில்—அவலம் மிக்க நிலையில்—சந்தித்தார்கள்; காதல் கொண்டார்கள். ஒரு நாளாவது நெஞ்சம் மறக்க முடியாத இன்ப உரைகள் பேசும் வாய்ப்பும், காதலின்பத்தில் மூழ்கும் வாய்ப்பும் பெற்றதில்லை. இவ்வேக்கத்தை, 'நெஞ்சம் ............... ஒரு முறையேனும் மூழ்கவில்லை' என்னும் பகுதி விளக்குகிறது.

பிரிக்க முடியாத உயிர்ப் பொருள்—காதலி— இறந்துவிட்டதால், இந்த வையமே இறக்கவேண்டும். அத்துடன் தானும் அழியவேண்டுமெனக் கருதுகிறான். உலகம் அழியவில்லை. தானாவது அழிய வேண்டும் எனக் கருதுகிறான். 'இந்த வையம் இறக்கவில்லை எனில் எனக்கு இங்கு என்னவேலை?' என்று கேட்கிறான்.

தன் காதலிக்கு உயிரான, பாண்டியன் பரிசாம் பேழையைக் கண்டு பிடிக்கவும் கொண்டு வரவும் எவ்வளவு பாடுபட்டான்! மோதலும் எதிர்ப்பும் கொஞ்சமா? அன்னத்தின் மேல் கொண்ட காதலால் அன்றோ வெற்றி பெற்றான்! அதைக் காணாமலே போய்விட்டாளே!

**மோதல் ஒன்றோ எதிர்ப்பொன்றோ இப்பேழைக்கு?**
**முழுமுச்சும் ஈடுவைத்துக் காத்து வந்தேன்!**
**ஈதலொன்று மற்றொன்று சாதல் என்றே**
**எண்ணினேன்! அன்னமே உன்மேல் கொண்ட**
**காதலன்றோ என்வெற்றி! கண்திறந்து**
**காணாயோ? பேழையையும் எனையும் விட்டுச்**
**சாதலுண்டோ திருவிளக்கே! இந்த வையம்**
**சாகவில்லை எனில் எனக்கு இங்கென்ன வேலை?**

தன்னுயிரையே பணயம் வைத்துக் காத்துக் கொண்டு வந்த பேழையைக் காதலி காணாமலே உயிர்விட்டு விட்டாளே என ஏங்குகிறான் காதலன்.

அரும்பாடுபட்டுப் பெற்ற பாண்டியன் பரிசு மூலம், காதல் வெற்றி, காதலின்பம், கதிர்நாட்டு ஆட்சியுரிமை, நாட்டு

மக்களுக்கு வேண்டிய நன்மைகள் செய்தல்–எனப் பலப்பல திட்டங்கள் தீட்டியிருந்தான் வேலன். ஆனால், அவ்வளவும் பாழாகிவிட்டனவே! வெறுங் கதையாய்–கனவாய்– மாறிவிட்டனவே! எவ்வளவு பெரிய ஏமாற்றம்! எவ்வளவு பெரிய வீழ்ச்சி! இதோ, ஏமாற்றத்தையும் வீழ்ச்சியையும் உணர்த்தும் பாடல்.

**வெண்ணிலவை எட்டிவிட்டேன் என்றிருந்தேன்**
**விண்ணின்று வீழ்ந்தேனே! தென்றல் காற்றின்**
**பண்ணமைந்த தமிழ்ப் பொதிகை எனக்கே என்றேன்**
**பாழ்ங்கிணற்றில் தூக்கியெறியப் பெற்றேனே !**
**தின்னெனவே இழந்தேனே, பசியைப் போக்கத்**
**திரட்டியமுப் பழச்சாறே என்னை விட்டு**
**மண்ண டைந்தாய்! திருவிளக்கே இந்த வையம்**
**மடியவில்லை எனில் எனக்கு இங்கென்ன வேலை?**

விண்வெளி வீரன், வெண்ணிலவை அடையும் நேரத்தில் விண்ணிலிருந்து மண்ணில் வீழ்ந்தது போலும், இசைத்தமிழ்ப் பொதிகை மலையின் உச்சியை அடையும்போது, பாழ்ங்கிணற்றில் தூக்கியெறியப்பட்டது போலும் எவ்வளவு பெரிய ஏமாற்றம்! காதல் பசியைப் போக்க வேண்டிய முக்கனிச்சாறு போன்ற அன்னம் மண்ணாகி விட்டாளே! குடும்ப விளக்கு ஏற்ற இருந்த திருவிளக்கு அணைந்துவிட்டதே! எவ்வளவு பெரிய அவலம்!

இங்ஙனம், காப்பியத்திற்கு வெற்றி நல்கக்கூடிய அவலச் சுவையைக் கவிஞர் நன்கு பயன்படுத்திக் காப்பியத்தைச் சிறக்கச் செய்துள்ளார். 85–ஆம் இயல் முழுதும் அவலச் சுவை நிறைந்த பகுதியாகும்.

# 7. நகைச்சுவை

அவல நோய்க்கு மருந்து நகைச்சுவை! வாழ்க்கைத் துன்பங்களை வீழ்த்தவல்லது நகைச்சுவை! இரத்தத்தைத் தூய்மையாக்கி, நரம்பில் முறுக்கேற்றி, உடலுக்கு வலிவூட்டக் கூடியது நகைச்சுவை! மானிடப் பிறவிக்கே உரிய சிறந்த–அரிய–பெரிய வரம் சிரிப்பு!

**இடுக்கண் வருங்கால் நகுக அதனை**
**அடுத்தூர்வது அஃதொப்பது இல். (-குறள், 62)**

என்றார் தெய்வப் புலவர்.

மெய்ப்பாடுகளைத் தொகுத்துக் கூற வந்த தொல்காப்பியர்.

**"நகையே அழுகை இளிவரல் மருட்கை**
**அச்சகம் பெருமிதம் வெகுளி உவகையென்று**
**அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப"**

என்னும் நூற்பாவில், நகைக்கு முதலிடங் கொடுத்துப் பாடியுள்ளார்.

**நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்**
**வகையென்ப வாய்மைக் குடிக்கு (குறள், 953)**

என்று திருவள்ளுவரும், நற்குடிப் பிறப்புக்குரிய குணங்களுள் நகைக்கு முதலிடங்கொடுக்கின்றார்.

'பொன்னகையினும் புன்னகையே சிறந்தது. 'மலர்ந்த முகமே வாழ்க்கையின்பம்' முதலிய பழமொழிகளும் நகைச்சுவையின் மேன்மையை உணர்த்தும். இத்தகைய நகைச்சுவைக்குரிய அடிப்படைகள் யாவை?

**எள்ளல் இளமை பேதைமை மடன் என்று**
**உள்ளப் பட்டநகை நான்கு என்ப. தொல். 1198**

என்பது தொல்காப்பியமாகும்.

(எள்ளல்=இகழ்தல், பேதைமை–அறியாமை, மடன்=அறிந்தும் அறியாது போலிருத்தல்)

இகழ்ச்சி, இளமை, அறியாமை, மடம் ஆகிய நான்கு காரணங்களாலும் நகைச்சுவை உண்டாகும். பேதைமை–அறியாமை–காரணமாக உண்டாகும் நகைச்சுவையே இக்காப்பியத்தில் மிகுதியும் வருகிறது.

## 1

அன்னமும் நீலியும் தனியிடத்தில் பேசிக் கொண்டிருக்கின்றனர். அப்பொழுது அங்கே, நரிக்கண்ணன் மகன் பொன்னப்பன் வருகிறான். அவன் சிரிக்க உடலெடுத்த கிறுக்கன்; அன்னத்திடம் காதல் மொழிகள் பலப்பல பேசுகிறான். அன்னத்தின் பதிலையெதிர் நோக்காமலும், அவளைப் பேசவிடாமலும் கேட்போருக்கு நகை உண்டாகும்படி, அவன் உளறிக் கொண்டே இருக்கின்றான். அவனது உளறுமொழிகளைப் பதின்மூன்று விருத்தப்பாக்களில், நகைச்சுவை நிறைந்து வழியப் பாடுகின்றார், கவிஞர். அவற்றுள் சிலவற்றை நோக்குவோம்.

**"நான் உன்றன் அத்தான் என்றான் சிரித்தான்!**
**தெரியாதா நான் நேற்றுக்காலை, வீட்டுத்**
**தென்புறத்தில் நின்றிருந்தாய் பார்த்தேன் என்றான்!"**
**"என் அப்பன் உன்மாமன் ஆதலாலே**
**எனக்கு மைத்துனிதான்! நானுன் அத்தான்!**
**பொன்னப்பன் என்று பெயர் எனக்கு! நான்மேல்**
**போட்டிருக்கும் பொன்னாடைபார் நகைபார்!"**

என்று தன்னைத்தானே அறிமுகப் படுத்திக்கொண்டும், தன் ஆடை அணிகள் பற்றியும் அழகு பற்றியும், மோகம் பற்றியும் புகழ்ந்து பேசிக் கொண்டும் போகிறான். திருமணத்தைப் பற்றியும் எதிர்கால வாழ்வைப் பற்றியும் அவன் பேசும் பேச்சுகள், வயிறு குலுங்கச் சிரிக்க வைக்கும்.

மணந்து கொண்டால் என்னிடமே இருக்க வேண்டும்!
மரியாதையாய் நடந்து கொள்ள வேண்டும்!
பிணம்போல எப்போதும் தூங்க வேண்டாம்!
பிச்சைக்காரர் வந்தால் அரிசி போடு!
பணம் போடு! குறைந்துவிடப் போவதில்லை!
பாலினிக்கும்! நம்வீட்டில் மோர் புளிக்கும்
துணிந்து நிற்பாய் என்னோடு திருடர் வந்தால்!
சுருக்கமென்ன முகத்தினிலே? அதெல்லாம் வேண்டாம்.

பெண்கள் சிரிப்பை அடக்கிக் கொண்டிருக்க, அவன் பேசிக் கொண்டே இருக்கிறான். திருடர் வந்தால் அவனுக்குத் துணையாகத் துணிந்து நிற்க வேண்டுமாம். அன்னம் முகஞ் சுளிக்கின்றாள். அதெல்லாம் வேண்டாம் என்கின்றான்.

கணவன் மனைவியர்க்கிடையே நடைபெறும் சிறுசிறு பிணக்குகள் பற்றியும், நாடாளும் பொறுப்புடைய அவனிடத்தில் வீட்டுக் குறைகளைச் சொல்லக் கூடாதென்றும், அதனால் அவனுக்குக் குறைவு நேரும் என்றும் அடுக்கிக் கொண்டே போகிறான்.

இவ்வகையாய்ப் பொன்னப்பன் அடுக்கு கின்றான்
இளவஞ்சி, நீலிமுகம் பார்த்துப் பார்த்தே
செவ்விதழின் கதவுடைந்து வரும் சிரிப்பைத்
திருப்பி அழைத்து உள்ளடக்கிக் கொண்டிருந்தாள்
எவ்வளவோ சொல்லிவிட்டான் இன்னும் சொல்வான்
என்தம்பி உனக்கென்ன பகையா? உன்னை
அவ்வளவாய் மதிக்கவில்லை என்று சொன்னால்
ஆ"குற்றம்? அப்படிநீ வைத்துக் கொண்டாய்!

அன்னம் உதட்டுக் கதவை உடைத்துக் கொண்டு வரும் சிரிப்பை, உள்ளடக்கிக் கொள்கிறாள். கற்பனையுலகில் மிதக்கும் கிறுக்கன், மாமியார் மருமகள் பிரச்சனை பற்றியும், நடக்காத திருமணத்திற்குப் பின் பிறக்காத குழந்தைகளின் குறும்புகளைப் பற்றியும் பேசுகிறான்.

மாமியார் ஒன்று சொன்னால் மறுக்கின்றாயே
மருமகளைக் காப்பதெல்லாம் யார்பொறுப்பு
நாமியார் அவரை விடச் சிறியோம் அன்றோ?
நம்பிள்ளை குட்டிகளை வளர்ப்பவர் யார்?
மீமிஎன்று அழும்ஒன்று, மற்றும் ஒன்று
விளையாடும், ஒரு பிள்ளை தேர்நடத்தும்,
ஆமிந்த வேலையெல்லாம் அவர் பார்க்கட்டும்
அதிலேநீ தலையிடுதல் சரியே இல்லை.

மேலும், முன்னுக்குப் பின் தொடர்பின்றி உளறுகின்றான். குழந்தைகளின் குறும்பைப்பற்றிப் பேசிய பிறகு, திருமண வீட்டின் அழகையும் பிறவற்றையும் பேசித் தாலி கட்டுதல் பற்றியும் பேசுகிறான்.

தவில் அடிப்போன் காதெல்லாம் கிழிப்பான்; அந்தச்
சந்தடியை விலக்கிவிட வேண்டும்; மிக்க
உவகையுடன் தாலியினைக் கட்டுகின்றேன்
உன் கழுத்தை என்பக்கம் திருப்பு நன்றாய்

என்று கூறுகிறான். இடையில் வேறு சிலவற்றைப் பேசிவிட்டு, இறுதியாக மீண்டும் பிள்ளைகளைப் பற்றிப் பேசுகின்றான்.

பிள்ளைகளைத் தூங்கவைத்த பிறகுதானே
பெற்றவள் தூங்கிவிடவேண்டும் அதைவிடுத்துச்
சொல்ஒழுக நீ முன்பு தூங்க லாமா?
சொல்என்றான் கொட்டாவி விட்டுக்கொண்டே

பிறக்காத பிள்ளைகளின் தூக்கம் பற்றிப் பேசும் போதே, அவனுக்குக் கொட்டாவி வந்து விடுகின்றது. இலக்கியச் சுவைஞர்களே! உங்களுக்குச் சிரிப்பை யடக்க முடியவில்லையா? சிறிது பொறுங்கள். அவன் குறட்டை விட்ட பின் சேர்த்துச் சிரிக்கலாம்.

பள்ளிக்குப் போகையிலே பிள்ளைகட்கும்
பண்டங்கள் கொடுத்தனுப்பச் சொன்னான். சொல்லி
வெள்ளை விழிகாட்டி உடல்துவண்டு குந்தி
மெதுவாகப் படுத்தபின் குறட்டை விட்டான்.

இப்பொழுது நன்றாகச் சிரியுங்கள். நீங்கள் சிரித்தாலும் சிரிக்காவிட்டாலும், நீலி சிரிக்கின்றாள். சிரிக்கின்ற நீலியினை நோக்கி அன்னம், 'சிரிக்க உடல் எடுத்தவனை மணக்கத் தக்க தேவையில்லை' என்கின்றாள். கண்டோர் சிரிப்பதற்காகவே பிறந்தவனாம் பொன்னப்பன்!

பொன்னப்பனின் பேதைமை மொழிகளைக் கேட்டுப் பெண்கள் எள்ளி–இகழ்ந்து–நகையாடுவதால், இந்நகைச் சுவைப்பகுதி, பேதைமை காரணமாகவும் எள்ளல் காரணமாகவும் நிகழ்ந்ததாகும்.

## 2

**பூதம்! பூதம்! :** நரிக்கண்ணனின் வஞ்சகத் திட்டப்படி, 'எட்டி' யென்பவன் பூத வேடமிட்டு, விடியற்காலையில், தென்மலையிலேறிப் பெருங் கூச்சலிட்டான். மலையைச் சார்ந்த வயல்களில் உழுவச் சென்ற உழவர்கள், பொய்ப் பூதத்தை உண்மைப் பூதம் என நம்பி, 'பூதம்! பூதம்!' எனக் கத்திக் கொண்டு ஊருக்குள் ஓடி வந்தனர். உடனே ஊரெல்லாம் பூத அச்சம் பரவிவிட்டது. அவரவர் புளுகுமூட்டையை அவிழ்த்தனர்.

**கலப்புச்சுவை :** அச்சமும் நகையும் கலந்த ஒரு கலப்புச் சுவையைக் கவிஞர், பல பாக்களில் படைத்துக் காட்டுகின்றார். சில பாக்களைச் சுவைப்போம்:

வாலிருந்ததோ? என்றேஒரு சேய் கேட்டான்
வாலில்லை பின்புறத்தில் ஏதோ ஒன்று
கோலிருந்ததோ என்றும் கொடியோ என்றும்
கூறமுடியா நிலையில் இருந்த தென்றான்
மேலிருந்து வந்திடுமோ என்றான் அந்த

வீதிவரை தந்ததனைப் பார்த்தேன் என்றான்.
காலிருந்தும் போதாமல் இறக்கை வேண்டிக்
கடிதாக ஓடினான் ஐயோ என்றே!

அவனோடக் கண்டொருவன் ஓட, அங்கே
அத்தனை பேரும் பறந்தார்! பூதம்! பூதம்!
இவனோடி வந்ததெனக் கூச்ச லிட்டார்!
இவ்வீதி அவ்வீதி மக்கள் எல்லாம்
கவணோடும் கல்லைப் போல் விரைந்தாரேனும்
எவ்விடத்தில் போவதென்றும் கருத வில்லை
கவலைஎரு துகள்போல மக்கள் யாரும்
கால்கடுக்க நகர்சுற்றிச் சுற்றி வந்தார்.

அத்தெருவில் அவ்வீட்டில் பூதம் என்றும்
அதுபூதம் இதுபூதம் எனப் புகன்றும்
தொத்துகின்ற வௌவால்போல் மரத்தின்மீதும்
தூங்குகின்ற பூனைபோல் பரண்கள்மீதும்
முத்தெடுக்கும் மனிதர்போல் கிணற்றி னுள்ளும்
மூட்டையினைப் போல்வீட்டின் இடுக்கி னுள்ளும்
மொய்த்திருக்க லானார்கள்! கருத்தின் பூதம்
முன்னிற்கும் பூதமாய் எங்குங் கண்டே.

இப்பாடல்கள், அச்சம், நகை முதலியவற்றோடு உவமைச் சுவையும் கலந்து கற்போருக்குப் பேரின்பம் ஊட்டுகின்றன. வஞ்சகரின் வஞ்சகமும், மக்களின் அறியாமையும் கலந்து நாட்டையே அல்லோல கல்லோலப் படுத்துகின்றன.

முன்நடப்போர் பின்வருவோர் தம்மையெல்லாம்
முகம்திருப்பிப் பார்க்குமுனம் பூதம் பூதம்
என்றலறி எதிர்வருவோர் தமை யணைக்க
என்செய்வோம் பூதம்என அவரும் ஓடி
நின்றிருக்கும் குதிரையையோ எதையோ தொட்டு
நிலைகலங்கி விழும்போதும் புழுதி தூற்றி

**முன்றிலிலே பிள்ளைகளின் கன்கெடுத்து**
**முழுநாட்டின் எழில்கெடுக்க முழக்கஞ் செய்வார்.**

பூத வேடமிட்டுக் கூக்குரலிட்டவன் ஒருவன்தான், ஆனால் மக்களின் அறியாமை, காணுமிடமெல்லாம் காணும் பொருளெல்லாம் பூதங்களாகத் தோன்றும்படிச் செய்து விட்டது. இங்ஙனம், மக்களின் பேதைமையை–அறியாமையை–அதனாலுண்டான அச்சத்தை, நகைச் சுவையுடன் படைத்துக் காட்டியுள்ளார் கவிஞர்.

மேலும் பூத அச்சத்தால் ஏற்பட்ட குழப்பத்தின் உச்சக்கட்டம்:

**அரண்மனையின் யானைவரப் பூதம் என்றே**
**அலறினார்! மாவுத்தன் வைக்கோல் வண்டி**
**எருதின்மேல் வீழ்ந்தான்! சாய்ந்து வைக்கோலும்**
**எழுப்பிவைத்த சாரந்தான் நெளிய உச்சி**
**இருந்தகொல் லூற்றுக்காரன் குதித்தான்!**
**எரியடுப்பால் கூரையும் வைக்கோலும் பற்றித்**
**தெருப்பற்றி எரிகையிலே, பூதம் அங்கே**
**சிரிப்பதென அலறினார் அடுத்த ஊரார்!**

பூதக்கதை இத்துடன் முடியவில்லை. வஞ்சகத்தை வஞ்சகத்தால் வெல்லக் கருதிய வேலன் கூட்டத்தார், "கோளுக்குங்கோள், பொய்க்கும் பொய்யே வேண்டும்" எனக் கருதி எதிர்ப் பூதம் விட்டனர். ஆள்மேல் ஆளேற்றி, ஈராள் உயரத்திற்கு நெடும் பூத வேடமிடப்பட்ட பல பூதங்களை மலை மேலனுப்பினர். அங்கும் பாண்டியன் பரிசைத் தேடிக் கொண்டிருந்த நரியின் ஆட்களும், மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்த நரியனும், அவர்களை உண்மையான பூதங்கள் எனக் கருதி அஞ்சி ஓட்டமெடுத்தனர்; நெடுந்தூரம் ஓடி அரண்மனைக்குள் புகுந்தனர்; அங்கும் நெடும் பூதத்தைக் கண்டனர்.

வடதிசையைத் தான்மறந்து மேற்குநோக்கி
வாழ்ந்தேன் கெட்டேனென்றே ஓடும்போதும்
தடதடென ஆயிரம்பேர் எதிர்வந்தார்கள்
சரியாக ஒருதென்னை அளவுயர்ந்த
கொடும்பூதம் வந்ததெனக் கூறினார்கள்
குள்ளநரி பட்டதுயர் கூறொனாதே!
பிடித்தான்பின் ஓட்டத்தைக் கிழக்கு நோக்கி
பெரும்பூதம் என்றுரைத்தார் அங்கும் பல்லோர்!

அரண்மனையில் நரிக்கண்ணன் ஆட்கள், பெண்கள்
அருகிருந்த தூண்கதவு பெட்டி யாவும்
பெரும்பூதமாய்த் தோன்றக் கதறி, ஓடிப்
பிணியுற்றார்! உயிர்விட்டார்! சிற்சிலர் போய்
பரனுக்குள் குடிபுகுந்தார்! இவ்வாறாகப்
பாழான அரண்மனைக்குள் யாழ்ச்சொல் அன்னம்
திரள்மலைத்தோள் வேலனோடும் நீலியோடும்
சிரித்தபடி உள்நுழைந்தாள் செப்பலுற்றாள்!

இங்ஙனம் பூதச் செய்தியில், புரட்சிக் கவிஞர், அச்சச் சுவையும் நகைச் சுவையும் கலந்த கலப்புச் சுவையை வாரி வழங்கியுள்ளார்.

இன்னும் ஒரெடுத்துக் காட்டுடன் இக்கட்டுரையை முடிப்போம். நரிக்கண்ணனும், அவனது ஆட்களும் கொல்லப்பட்டு, பூதப்புரட்டு வெளிப்படுத்தப்பட்டு, நகர மக்கள் பூத அச்சம் தெளிந்தனர்.

வேலன், தன் வீரர்களுடன் குறிப்பிட்ட ஒரு நாளிரவில் பாண்டியன் பரிசைப் பெற்றுத் திரும்பிக் கொண்டிருக்கிறான். அப்பொழுது, மற்றொரு வஞ்சகனாகிய நீலனால் ஏவப்பட்ட சில முட்டாள் வீரர்கள், பாண்டியன் பரிசைப் பறிப்பதற்கு மங்கிய நிலவொளியில் செல்கின்றனர். அப்பொழுது நடைபெறும் நிகழ்ச்சி:

**ஆலடியில் நின்றிருந்த கழுதை தன்னை**
**அங்கொருவன் தொட்டுதையும் பட்டு வீழ்ந்தான்!**
**காலடியோ கைகாட்டாது ஒருவன் சென்று**
**கல்தூணை மற்போருக்கு அழைக்கல் ஆனான்!**
**வேலடியை ஆளென்று நெருங்கி: முட்கள்**
**வெடுக்கென்று தைத்ததினால் நடுக்கங் கொண்டான்**
**மேலெழுந்த நிலவிலும் இத் தொல்லை யாயின்**
**மிகுமிருட்டு வேளையெனில் என் ஆவாரோ?**

மங்கிய ஒளி காரணமாகவும், அவசரங் காரணமாகவும், அறியாமை காரணமாகவும், கழுதை, கல்தூண், வேலமரம் ஆகியவற்றைப் பகையாள் எனக் கருதி நீலன் ஆட்கள் பட்ட பாட்டை இப்பாடல் நகைச்சுவையுடன் விளக்குகிறது.

நிலவிலேயே இத்தொல்லையென்றால், மிக்க இருட்டில் என்ன பாடுபடுவரோ? என்னும் வினாவானது மேலும் நகைச்சுவையைப் பெருக்கிக் காட்டுகிறது.

இங்ஙனம் பேதைமை காரணமாக எழும் நகைச்சுவையை 'பாண்டியன் பரிசு' க் காப்பியம் 46,49,56,65,80 ஆகிய இயல்களில் நிறையவே வழங்கியுள்ளது. படித்துச் சுவைத்துச் சிரித்து மகிழ்க!

## 8. இளிவரல் சுவை

முகஞ்சுழிக்கும்படியாக மனத்தில் அருவருப்பை உண்டாக்குவது இளிவரலாகும். 'இழிவு' என்றும் சொல்லப்படும். சுவைகளிலேயே இழிந்த–தாழ்ந்த–சுவை இளிவரலே. முதுமை, நோய், வீண்முயற்சி, வலிமையற்ற எளிமை ஆகிய காரணங்களால் இளிவரல் உண்டாகும்.

**மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு**
**யாப்புற வந்த இளிவரல் நான்கே.**
**-தொல் 1200**

என்பது தொல்காப்பிய நூற்பா.

மூப்பு=முதுமை, பிணி=நோய், மென்மை=எளிமை, யாப்புற=உணர்வு திட்பமுறும்படி.

மூப்பு, பிணி ஆகியவற்றால் ஏற்படுவது இறப்பு. உயிர் நீங்கிய உடல் நேரமாக ஆகஇளிவரலை மிகுவிக்கும்.

'அன்னம் கொல்லப்பட்டு, இடுகாட்டில் புதைக்கப்பட்டாள் என்னுந் தவறான செய்தியைக் கேள்விப்பட்டு நம்பிய வேலன், வருத்தம்–துயரம்–மேலிட்டால், இடுகாடு அடைந்து, அங்கு புதைக்கப்பட்டிருந்த ஏதோ ஒரு பிணத்தைத் தோண்டியெடுத்து மடிமீது வைக்கிறான். மங்கிய நிலவொளியில் அடையாளம் சரியாகத் தெரியவில்லை. முத்தங் கொடுக்கக் குனிகின்றான். மேகத்தில் மறைந்திருந்த முழுநிலவு வெளிப்படுகிறது. முழுதும் அழுகி, சதை கழன்று, பல் இளிக்கும் முகத்தைக் காண்கிறான்! அருவருப்புடன் சீ! என்று பிணத்தைத் தூக்கியெறிந்து விட்டு இழிப்புரை பல பலப் பேசுகின்றான். இனி கவிதைகளைச் சுவைப்போம்.

"முத்தமடி" கடைசீமுறை! ஒன்றே ஒன்று
    முடிந்ததடி என்வாழ்வும்! உயிர்க்கிளைமேல்
தொத்துக்கிளியே! என்று மலர்க் கன்னத்தைத்
    துணைவிழியால் தேடுங்கால் முழு நிலாவும்
மொய்த்தமுகில் கிழித்து வெளிப்பட்டதாலே
    முழுதழுகி ஊன் கழன்ற நிலையுங் கண்டான்!
கொத்தாகக் குழல் கழன்ற நிலையுங் கண்டான்!
    குடல் சரிதல் கண்டான்! பல் இளித்தல் கண்டான்!
சீ! என்று பிணமெறிந்து விரைந்தெழுந்து
    சிதையுடலை மறுமுறையும் உற்று நோக்கி
ஏ! இதற்குத்தானா? இவ்விழியுடற்கா?
    இருள் கண்டால் விழிமூடும்! நோயும் அஞ்சும்!
வாயெச்சில் கண்டாலும் அருவருக்கும்!
    மாக்கீழ்மை! இதற்குத்தானா இப்பாடு!
ஈயருந்த அழகு தசை, எறும்பு மொய்க்க
    இற்றொழுகு புண்ணீர்! மற்றதிலோ நாட்டம்!

இருளுக்குக் காணக் கண்ணிருந்தால், அதுவோ காணச் சகிக்காமல் கண்மூடிக் கொள்ளுமாம்! நோயும் அவ்வுடலைக் கண்டு அஞ்சுமாம்! வாயெச்சிலுக்குக் கண்ணிருந்தால் அதுவும் அருவருக்குமாம்! இப்பாடலில் வருகின்ற ஒவ்வொரு சொல்லும் இளிவரல் சுவையை மிகுத்துக் காட்டுகிறது! மீண்டும் படித்துச் சுவைக்கத் தூண்டுகிறது! ஈயும் எறும்பும் மொய்க்கும் பிணத்தை வருணிக்கும் பாடலை, மீண்டும் படித்துச் சுவைக்கும் படியாகப் பாடுவதிலும் கவிஞன் திறமை மிளிர்கிறது! இதுதான் இளிவரல் சுவை!

மேலும், இளிவரல் சுவையையும் உவமைச் சுவையையும் கலந்து நிலையாமையை வருணிக்கின்றார் கவிஞர்.

**பேன்நாறி வீழ்குழலைத் தேனாறு என்றும்**
**பீளை ஒழுகும் விழியை நீலம் என்றும்**
**மேல்நாறும் சளிமூக்கை எள்பூ என்றும்**
**வெறுங் குறும்பிக் காதைஎழில் வள்ளையென்றும்**
**ஊன்நாறும் ஊத்தைப்பல் வாயுதட்டை**
**ஒளிமுல்லை செவ்வாம்பல் கோவையென்றும்**
**தோல்நாறும் கன்னம் கண்ணாடி என்றும்**
**துயர்ஈளை பயில்குரலைக் குயில்தான் என்றும்,**

**உடல்சுமக்கும் உரல்போலும் இடையே, வானின்**
**உச்சியதிர் மின்னலிலும் அச்சம் என்றும்**
**கொடுங்குள்ள வாத்துநடை அன்னம் என்றும்**
**குறுகிய செக் குலக்கைக்கால் வாழை என்றும்**
**இடும்பையிலே இடுங்குதிகால் கவடியென்றும்**
**ஈர்த்த வெள்ளடி தாமரைப் பூவென்றும்**
**கெடும்படியே சொல்லிவைத்தார் புலவர், நேரில்**
**கிழக்கினையும் மேற்கென்று கிளத்துவார்போல்.**

இங்ஙனம், கண்டார் அருவருக்கும் இளிவரலையும், சுவையாக்கிப் பாடுவது தலைசிறந்த கவிஞருக்குக் கை வந்த கலையாகும். மேலும் தொடர்ந்து இன்னும் சில பாக்கள்

இச்சுவையுடன் வருகின்றன. காப்பியத்தில் படித்துச் சுவைக்க! இப்பகுதியுடன், தாயுமானவர் பாடிய 'யாக்கையைப் பழித்தல்', 'மாதர் மயக்கறுத்தல்' என்னும் பகுதிகளையும் ஒப்பு நோக்கி மகிழலாம்.

# 9. மருட்கைச் சுவை

காண்போரை, அல்லது உணர்வோரை வியக்க வைப்பது வியப்புச் சுவையாகும். இதைத் தொல்காப்பியர் 'மருட்கை' எனக் கூறுவர். புதிதாக ஒன்றைக் காணல், மிகப் பெரியதாகக் காணல், மிக நுண்ணிய–சிறிய–அளவில் காணல், ஒரு பொருள் திரிந்து வேறு ஒரு பொருளாக மாறுவதைக் காணல் ஆகிய நான்கு காரணங்களால், மருட்கைச் (வியப்பு) உண்டாகும்.

**'புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு**
**மதிமைசாலா மருட்கை நான்கே'** **- தொல்.1201.**

(மதிமைசாலா–அறிவால் அமையாத.)

என்பது தொல்காப்பியம். உலக வழக்கினுள் நின்றவாறு நில்லாமல், அறிவைத் திரித்து வேறுபடுத்துவது வியப்பு எனும் மெய்ப்பாடாகும். அதனால், 'மதிமை சாலா மருட்கை' என்றார். திரிபின்றி இயல்பாகிய அறிவுடன் கூடிய நிலையில் மருட்கை தோன்றாது.

இனி, பாண்டியன் பரிசுதரும் மருட்கைச் சுவையைக் காண்போம்.

பெற்றோரையும், நாட்டையும் இழந்து, பெருந்துயரில் மூழ்கியிருக்கும் அன்னத்திற்குச் சிறிது மகிழ்ச்சியூட்டுவதற்காக நீலியென்னும் தோழி, மாலை நேரத்தில் செய்யாற்றில் ஓடம் ஏறி உலாவ அழைக்கிறாள். அன்னமும் நீலியும் செம்படகில் ஏறி, தேங்கி நிற்கும் நீரில் படகைச் செலுத்துகின்றனர். மாலை வானம் அழகாகக் காட்சியளிக்கிறது, செவ்வானம் பொன்னாறு போலவும்,

செங்கதிர் மாணிக்கப் படகு போலவும் காட்சியளிக்கின்றன! கிழக்கு வானம் மஞ்சள் வெயிலால் அழகிய ஒளிமயமாகத் திகழ்கிறது. இயற்கையழகென்னும் தேனையருந்தும் வண்டுகளாக அவர்கள் திகழ்கிறார்கள். இந்நிலையை, மருட்கைச் சுவையுடன் கவிஞர் பாடியுள்ளார்.

**தேங்கி நிற்கும் புனல்மீது செல்லாநிற்கும்**
**செம்படகில் ஒருபுறத்தில் சிரித்த வண்ணம்**
**பாங்கிநிற்கப் பார்த்துநின்ற அன்னம் சொல்வாள்!**
**பாரடிநீ மேற்றிசை வானத்தை! அங்கும்**
**தேங்கிநிற்கும் பொன்னாற்றில் செழு மாணிக்கச்**
**செம்பருதிப் படகோடும்! கீழ்த்திசைவான்**
**வாங்கிநிற்கும் ஒளியைப்பார்! காட்சித் தேனில்**
**வண்டடி நாம்! என்றுரைத்து மகிழ்ந்து நின்றாள்.**

இப்பாடலின் பின்பகுதி முழுவதும் வியப்புச்சுவை பொங்கி வழிகிறது. மாலை நேரத்தின் மஞ்சள் வெயிலால் செய்யாற்று நீர், பொன்னிறமாகக் காட்சியளிக்கிறது! மேற்க வானமும் உருக்கி வார்த்த பொன்மயமாக–பொன் ஆறாகக் காட்சியளிக்கிறது. மாலைக் கதிரவன் மாணிக்கப் படகாகக் காட்சியளிக்கிறான்! கிழக்கு வானமும் மஞ்சள் வெயிலால் திகழ்கிறது! ஆற்றங்கரைச் சோலையில் பூக்கள் தளிர்கள் யாவும் பொன்னொளிப் பெற்றுத் திகழ்கின்றன! பகல் நேரத்திலும் மாறுபட்ட, புதுமையான தோற்றத்துடன் இயற்கைக் காட்சிகள் விளங்கி வியப்பூட்டுகின்றன!

புதுமை, ஆக்கம் முதலிய காரணங்களால் தோன்றிய மருட்கையாகும் இது.

பாரதியார், பாஞ்சாலி சபதத்தில், மாலை வருணனையை, வியப்புச்சுவை சொட்ட சொட்டப் பல பாக்களில் பாடியுள்ளார். அவற்றுள் இறுதிப் பகுதியை இங்கு ஒப்புநோக்கி மகிழ்வோம்.

அர்ச்சுனன் மாலைக் காட்சியைப் பாஞ்சாலிக்குக் காட்டி மகிழ்கிறான்:

**பார்! சுடர்ப்பரிதியைச் சூழவே படர்முகில்**
**எத்தனை தீப்பட்டெரிவன! ஓகோ!**
**என்னடீ! இந்த வண்ணத்து இயல்புகள்!**
**எத்தனை வடிவம்! எத்தனை கலவை!**
**தீயின் குழம்புகள்! செழும்பொன் காய்ச்சி**
**விட்ட ஓடைகள்! - வெம்மை தோன்றாமை**
**எரிந்திடுந் தங்கத் தீவுகள்!-பாரடீ!**
**நீலப் பொய்கைகள்!-அடடா! நீல**
**வண்ணமொன்றில் எத்தனை வகையடீ!**
**எத்தனை செம்மை! பசுமையும் கருமையும்**
**எத்தனை!-கரிய பெரும்பெரும் பூதம் !**
**நீலப் பொய்கையின் மிதந்திடும் தங்கத்**
**தோணிகள்; சுடரொளிப் பொற்கரையிட்ட**
**கருஞ்சிகரங்கள்!-காணடி, ஆங்கு**
**தங்கத் திமிங்கலம் தாம்பல மிதக்கும்**
**இருட்கடல்!-ஆஹா! எங்கு நோக்கிடினும்**
**ஒளித்திரள்! ஒளித்திரள்! வண்ணக் களஞ்சியம்!**

உளத்தாலும், கருத்தாலும், உரையாலும் ஒன்றிய நண்பர்களாக, உலகளாவ வாழ்ந்த பேரியற்கைப் பெருங்கவிஞர்களல்லவா இருவரும்! எனவே, அப்பெருமக்கள் பாடுங்கவிகளும் ஒப்பநின்று உணர்வூட்டி, உலகினை இன்புறுத்துதலும் இயற்கைதானே!

## 10. அச்சச் சுவை

வாழ்க்கைக்கும் உயிர்க்கும் தீங்கு நேரும் எனக் கருதி, உள்ளம் நடுக்குற்று அஞ்சுவது அச்சமாகும். பேய், பூதம் முதலியன, விலங்கு, கள்வர், தம்மையாளும் தலைவர் ஆகியவற்றால் அச்சம் உண்டாகும்.

**அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்**
**பிணங்கல் சாலா அச்சம் நான்கே** - தொல்.1202.

என்று கூறுகின்றார் தொல்காப்பியர்.

அணங்கு–பேய், பூதம் முதலியன. தம்இறை–தந்தை ஆசிரியர், அரசன், வழிபடுதெய்வம் என இவ்வுரிமை முறையில் பணிகொண்டு தம்மையாளும் தலைவர். பிணங்கல் சாலா–மாறுபாடு இல்லாத.

அச்சந் தருவன கண்டும் உள்ளத்தில் நடுக்கம் ஏற்படவில்லையென்றால், அச்சம் தோன்றாது. அதனால்தான் பிணங்கல் சாலா அச்சம் என்றார்.

அறிவு, ஆற்றல், உள்ள உறுதி, தறுகண் ஆகியன உடையோர், அணங்கு, விலங்கு, கள்வர் முதலியன கண்டு அஞ்சாது எதிர்த்துப் போரிட முயல்வர். அவர்களே வீரர் ஆவார். தலைவரின் நல்லாணைக்குக் கட்டுப்படுதலும், தீய ஆணைக்கு அஞ்சாது எதிர்த்தலும் வேண்டும். வீண்பழிதரும் தீயசெயலுக்கு அஞ்சிச் செய்யாது விடுதல் அறிவுடைமையாகும். தீயவற்றை அஞ்சாது செய்தல் பேதைமை ஆகும்.

"அஞ்சுவது அஞ்சாமை பேதைமை; அஞ்சவது
அஞ்சல் அறிவார் தொழில்" - குறள்.428.

என்பது வள்ளுவம்.

அறியாமையால் பொய்ப் பூதத்தைக் கண்டு அஞ்சும் அச்சம், பாண்டியன் பரிசில் விரிவாக வருகிறது. அறியாமை காரணமாகத் தோன்றிய அச்சமாகையால், நகைச்சுவையுடன் அச்சத்தைக் கலந்து கவிஞர் பாடியுள்ளார். 'நகைச்சுவை' என்னுந் தலைப்பில் பல பாக்கள் காட்டியுள்ளேன். அங்குக் காட்டாது விட்ட ஒரு பாடல் மட்டும் இங்கு எழுதுகிறேன்.

"ஒளி விளைக்கும் சுதிரவனும், தோன்றாக் காலை, உயிர் விளைக்க நெல்விளைக்கும் உழவரெல்லாம் களிவிளைக்குந் தமிழாலே" பாட்டுப் பாடிக் கொண்டு, தென்மலை சார்ந்த வயல்களில் உழவு செய்யச் சென்றனர். அந்த விடியற்காலை நேரத்தில், நரிக்கண்ணனின் வஞ்சகத் திட்டப்படி,

எட்டியென்பவன் பூத வேடமிட்டுத் தென்னையின் மீதேறிப் பெருங்கூச்சல் இடுகிறான், அக்கூச்சலைக் கேட்டும், பொய்ப் பூதத்தைக் கண்டும், நடுக்கங்கொண்ட உழவர்கள் பேரச்சத்துடன் எருதுகளையும், கலப்பையையும் அப்படியே விட்டுவிட்டு ஓடுகின்றனர். இதோ கவிக்கூற்று:

**ஆழ்ந்தடிக்கும் ஏரடியும் தாற்றுக்கோலும்**
**அயலடிக்கும் வால்எருதும் நோக்கா ராகி**
**வீழ்ந்தடித்துக் கொண்டோடி நகரடைந்து**
**விலா அடிக்கும் பெருமூச்சுவிட்டு நின்று**
**சூழ்ந்தடித்துத் தின்ன ஒரு கரிய பூதம்**
**சுடரடிக்கும் கொடுவாளும் கையு மாகத்**
**தாழ்ந்தடி மேல் அடிவைத்து வருங்கால் அந்தச்**
**சந்தடி கேட்டு அடியேங்கள் வாழ்ந்தோம் என்றார்.**

வீழ்ந்தடித்துக் கொண்டு ஓடுதல், மிகுந்த இருதயத் துடிப்பால் விலா அடித்தல், பெருமூச்சு விடுதல் ஆகியவை அச்ச உணர்வின் மெய்ப்பாடுகளாகும். இவ்வச்சம் அணங்கும் வகையால் ஏற்பட்ட அச்சமாகும்.

# 11. வெகுளிச் சுவை

சினம், கோபம் என்றெல்லாம் சொல்லப்படுகின்ற வெகுளி மிகவும் பொல்லாதது! நகையையும் உவகையையுங் அழிக்கக் கூடியது! சினம், கொண்டவனையே கொல்லக்கூடியது! இனமென்னும் ஏமப்புணையை–தனக்குப் பாதுகாவலாக இருக்கக் கூடிய உறவினர் நண்பர் ஆகிய இன்பப் படகையும் சுட்டெரிக்கக் கூடியது!

**"சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்**
**ஏமப் புணையைச் சுடும்.** -(குறள் 306)

என்பது வள்ளுவர் வாய்மொழி. இத்தகைய கொடிய சினம் துறவிகளுக்கு அறவே வரக்கூடாது என்பதற்காக,

'வெகுளாமை' என்னும் அதிகாரத்தைத் துறவற இயலில், வள்ளுவர் வைத்துள்ளார்.

குணக்குன்றாகத் திகழும் சான்றோருக்கு எளிதில் சினம் வராது; வந்தாலும் சிறிது நேரந்தான் இருக்கும்; அந்தச் சிறிது நேரத்தில் அது செய்யும் தீமையோ மிகப் பெரியதாகும். சினத்திற்கு ஆளானவர் நொடிப் பொழுதும் தம்மைக் காத்துக் கொள்ள இயலாது.

" குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது" (குறள். 29)

என்று தெய்வப் புலவர் கூறுகின்றார்.

ஆயினும், இல்லத்திலிருப்போருக்கும், தலைமைப் பொறுப்பிலிருப்போருக்கும் இன்றியமையாத சமயங்களில் வெகுளி தேவைப்படுகிறது. அவ்வெகுளி தோன்றுவதற்குரிய அடிப்படைகள் யாவை?

கைகால் கண்முதலிய உறுப்புகளுக்குத் தீங்கிழைத்தல், தன் குடிப்பெருமைக்கும், தன்னைச் சார்ந்தோருக்கும் தீமை செய்தல், அரசியல் நெறிக்கு மாறாக ஆள்வோரின் கொடுங்கோன்மை, கொலை முதலிய காரணங்களால் வெகுளியுண்டாகும்.

"உறுப்பறை குடிகோள் அலைகொலை என்று
வெறுப்ப வந்த வெகுளி நான்கே" -(தொல்.1204)

என்கின்றார் தொல்காப்பியர்.

உறுப்பறை=உறுப்புக்களைத் துண்டித்தல்.

குடிகோள்=தன்கீழ்வாழ்வாரைப் பிறர் துன்புறுத்தல்.

அலை = கொடுங்கோன்மை.

குடிகோளால் ஏற்படும் சினம் பாண்டியன் பரிசில் வருகிறது. குடிப்பெருமைக்கு இழுக்கு தரக் கூடியதும், குடிமக்களுக்குத் தீங்கு தரக் கூடியதுமான இழி செயல்களை, அண்ணனாகிய வஞ்சக நரிக் கண்ணன் செய்வது கண்டு, தங்கையும் வீரமங்கையுமாகிய கண்ணுக்கினியாள் வெகுண்டு பொங்கியெழுகின்றாள்!

**"நெடுவிழியில் கனல்சிந்த அரசி சொல்வாள்"**

சினத்துடன் அவள் கூறிய வீரமொழிகள், 'வீரச்சுவை' என்னும் தலைப்பில் விளக்கப்பட்டுள்ளன. நெடுவிழியில் கனல் சிந்தல் வெகுளியின் மெய்ப்பாடுகளுள் ஒன்றாகும்.

**"என் அண்ணன் எங்குள்ளான் அங்கே செல்க**
**என்றாள்; தேர் ஏறினாள்; எரியுங்கண்ணாள்!"**

"எரியுங்கண்ணாள்" என மீண்டும் அதே மெய்ப்பாடு வருகிறது.

**"பகைப்படையின் உட்புகுந்து தேடிக் கண்ணில்**
**பட்டவரின் உடல் சாய்த்தே, புறங்கள் எட்டும்**
**நகைப்பாலே நெருப்பாக்கிப் புருவம் ஏற்றி**
**நாற்புறத்து வாயிலையும் சுற்றி வந்தாள்!"**

வீரமங்கை கண்ணுக்கினியாள், போர்க்களத்தில் எதிர்ப்பட்ட பகை வீரரை வெட்டி வீழ்த்தி, வெகுளிச் சிரிப்பால், எட்டுத் திசைகளையும் நெருப்பாக்கி, புருவத்தை ஏற்றி வஞ்சகனைத் தேடிச் சுற்றி வருகிறாள். வெடிச் சிரிப்புச் சிரித்தலும், புருவத்தை மேலேற்றிப் பார்த்தலும், வெகுளியின் மெய்ப்பாடுகளாகும்.

**"கைவேல் களிற்றொரு போக்கி வருபவன்**
**மெய்வேல் பறியா நகும்" - (குறள்.774)**

என்னுங் குறட்பாவில் வரும் 'நகும்' என்பதை ஒப்பு நோக்குக.

பல்சுவை பொதிந்த பாண்டியன் பரிசில் வெகுளிச் சுவை சிறிதே இடம் பெற்றுள்ளது.

## 12. உவகைச் சுவை

அழுகை அல்லது அவலச் சுவைக்கு நேர் எதிரானது உவகைச் சுவை. ஆயினும், அவலம், உவகை ஆகிய இரண்டுமே இலக்கியத்திற்கு இன்றியமையாச் சுவைகளாகும். இவ்விரண்டுங்கலந்தது தானே மனித வாழ்வு?

செல்வ நுகர்ச்சி, கல்வியறிவு, காதலின்பம், இயற்கைச் சூழல்களில் துணையோடு விளையாடல் ஆகிய நான்கு காரணங்களாலும் உவகை உண்டாகும்.

**"செல்வம் புலனே புணர்வு விளையாட்டு என்று**
**அல்லல் நீத்த உவகை நான்கே"** **- தொல் 1205**

என்பது தொல்காப்பியம்.

புலன் = கல்வியறிவு. புணர்வு = காதலின்பம்,

அல்லல் = பிறர் துயரம்.

அற்பர், பிறர் துயரங்கண்டு மகிழ்தல் போலி உவகையாகும்; உண்மை யுவகையாகாது. ஆதலால் 'அல்லல் நீத்த உவகை' என்றார்.

பண்டைய தமிழர் காதல், வீரம் ஆகிய இரண்டையும் இருகண்களெனப் போற்றி வாழ்ந்தனர். இவ்விரண்டைப் பற்றியே பண்டைய இலக்கியங்கள் அதிகம் நவிலும், தமிழ்ப் பண்பை விளக்க எழுந்த பாண்டியன் பரிசும் இவ்விரண்டையும் சிறப்பிக்கின்றன. புணர்வு (காதலின்பம்) காரணமாக எழும் உவகைச் சுவையே பாண்டியன் பரிசில் விரவியுள்ளது.

கதிர்நாட்டின் மன்னன் கதிரைவேலனும், காதல் மனையாளும் மகிழ்ந்திருப்பதை விளக்குகிறார் கவிஞர்.

**கதிர்நாட்டின் கதிரைவேல் மன்னன் தானும்**
**காதல் மனையாள் கண்ணுக்கினியாள் தானும்**
**சதிராடு கூடத்தில் தவிசமர்ந்து**
**தமிழ்ப் பூவால் இசைப்பாக்கள் புனைந்திருந்தார்.**

காதலுவகை தருவனவற்றுள் இசைப்பாவுக்குத் தலைமையான இடமுண்டு. தற்காலத் திரையுலகில், பாட்டில்லாத காதல் காட்சியுண்டா? இதை நன்குணர்ந்த தீந்தமிழ்க் கவிஞர், தமிழ்ப் பற்றுடனும், உருவக நயத்துடனும் "தமிழ்ப் பூவால் இசைப்பாக்கள் புனைந்திருந்தார்" என மிக நயமாக காதலு வகையைப் பாடியுள்ளார்.

## 2

நரிக்கண்ணனின் பூதச் சூழ்ச்சிக்கு எதிர்ப்பூதச் சூழ்ச்சியால், நரிக்கண்ணனும் அவன் கூட்டத்தாரும் அரண்மனையிலிருந்தே விரட்டப்பட்டனர். வேலனும் அன்னமும் தனித்திருக்கும் பொழுது அன்னம் வேலனை நோக்கி,

**முறையாமோ இமைப்பொழுதே அமைதி கேட்டேன்**
**முழுநாளும் தழல்தழுவிக் கிடப்பாருண்டோ?**
**நிறைவுறும் உன்மொழியான குளிர்மரத்து**
**நீழலிலே விளையாடி மகிழ்வேன் என்றாள்.**

அதற்கு வேலன் கூறுவதாக வரும் பாடல்:

**கரும்பெடுத்துப் பிழிந்ததுவும் என்சொல் தானோ?**
**கனியெடுத்து வைத்ததும் என் இதழோ? முல்லை**
**அரும்பெடுத்துக் கொட்டியதும் என் சிரிப்போ?**
**அடியெடுத்தால் அழகெடுக்கும் அன்னமே உன்**
**சுரும்பெடுத்த இசைபோலும் சொல்லெடுத்தால்**
**சுவையெடுப்பாய் இருக்கும் இனிக் கொஞ்சிப்பேசி**
**இரும்பெடுத்துச் செய்திருக்கும் என்றன் காதில்**
**இன்னமுதைப் பாய்ச்சாயோ என்றான் வேலன்.**

இப்பகுதியில் வரும், காதற்சுவை, சொற்சுவை, உவமைச் சுவை ஆகியவற்றுடன் கூடிய உவகைச் சுவை, கற்பாருக்கு உவகையூட்டுகிறது.

# 3

நரியன் கூட்டத்தார், நீலன் கூட்டத்தார் ஆகியோரின் சூழ்ச்சித் திட்டங்களையெல்லாம், வேலன் அரும்பாடுபட்டுத் தகர்த்து வென்று பாண்டியன் பரிசை மீட்டு வந்தான். 'அன்னம் கொல்லப்பட்டு இடுகாட்டில் புதைக்கப்பட்டாள்' என்னும் பொய்ச் செய்தியை உண்மையென நம்பி இடுகாட்டிற்கு ஓடிக் கதறுகின்றான். அப்பொழுது அன்னம் வேலன்முன் வந்து நிற்கின்றாள். பெருமகிழ்வு கொண்ட அவன், பாண்டியன் பரிசுப் பேழையை அவளிடம் ஒப்படைக்கிறான். அன்னம், எல்லையற்ற மகிழ்ச்சியுடன் அப்பேழையை வாங்கிக் கீழே வைத்துத் திறந்து பார்த்து, உரிய யாவும் இருக்கக் கண்டு மகிழ்ந்து, காதல் பெருக்குடன்,

"முகந்தாழ்த்திக் கால்விரலால் தரையைக் கீறி
முடிந்ததுசூழ் கடிமணந்தான் மிச்சம் என்றாள்".

நாணத்தால், முகந்தாழ்த்தித் தரை நோக்கலும், கால் விரலால் தரையைக் கீறலும் காதலின் மெய்ப்பாடுகளாகும். "யான் நோக்குங்கால் நிலன் நோக்கும்" என்னுங் குறள் பகுதியோடு ஒப்பிடுக.

ஆம் என்றான் அள்ளூற! இனிமேல் உம்மை
அத்தான் என்றழைத்திடுவேன் என்றாள் அன்னம்.
தூமணியே செய் என்றான்! என்னை வந்து
தொடுங்கள் அத்தான் என்றுரைத்தாள்! தீர்ந்தபின்னர்
மாமயிலே இனிமெதுவாய் நடப்பாய் என்று
மணிப் பேழை தான் தூக்கி நடக்க லானான்!
....................

வேலன், இடையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறிவிட்டு, "பெண்ணே! இன்பமன்றோ நடை முத்தம்!" என்று முத்தம் கேட்டான்.

நீலனுடைய சூழ்ச்சி பற்றிப் பேசி முடித்த பிறகு வேலன் அன்னத்தின் இதழ் சுவைக்கத் துடிக்கின்றான்.

**"இவையெல்லாம் இருக்கட்டும், பெண் இதழ்தான்**
**கன்னலின் சாறு என்கின்றார் மெய்யா என்றான்.**
**காணிர்என உளங்கனிந்தாள்! நடக்கலுற்றாள்!**

'பெண்ணுதடு கரும்புச் சாறுபோல் இனிக்கும் என்று கூறுகின்றார்களே! அது உண்மையா' என்று கேட்டான். சுவைத்துப் பாருங்கள் என்று இதழ் கொடுத்து உள்ளங்கனிந்தாள்! காதலர் மகிழ்ந்தனர்!

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயிறு ஊறிய நீர்" **(குறள். 1121)**

என்னுங் குறட்பாவோடு ஒப்பிட்டு நாமும் மகிழ்வோம், மேலும் அன்னம் கூறுகின்றாள்:

நானில்லை எனத்தெரிந்தால் நீரும் இல்லை.
நடுத்தெருவில் பேழைதான் கிடக்கும்! நீலன்
தானிந்த நாட்டினையும் எனையும் பெற்றுத்
தனியாட்சி நடத்தலாம் எனநி னைத்தான்!
தேனில்லையெனில் நல்ல வண்டும் இல்லை
செத்தொழிவேன் நீர் இறந்தால்! இதனை நீலன்
ஏனறிய வில்லை? இருக்கட்டும்! தென்றல்
இருவருக்கும் நடுச் செல்ல விடாதீர் என்றாள்.

தெய்வீகக் காதலின்–தமிழ்ப் பண்பாட்டின்–உயிர்ச் சுவையாக இப்பாடல் திகழ்கிறது! "நானில்லை எனத் தெரிந்தால் நீருமில்லை" "செத்தொழிவேன் நீர் இறந்தால்" என்னும் தொடர்களோடு,

**"உடம்பொடு உயிரிடை என்னமற்றன்ன**
**மடந்தையொடு எம்மிடை நட்பு"** -குறள்.1122

**"வாழ்தல் உயிர்க்கு அன்னள் ஆயிழை; சாதல்**
**அதற்கு அன்னள்நீங்கு மிடத்து"** -1124

**"செல்லாமை யுண்டேல் எனக்குரை; மற்றுநின்**
**வல்வரவு வாழ்வார்க்கு உரை"** -1151

என்னும் குறட்பாக்களை ஒப்பிட்டு மகிழலாம். மேலும் "தென்றல் இருவருக்கும் நடுச்செல்ல விடாதீர்" என்னுந் தொடர்.

**"வீழும் இருவர்க் கினிதே வளியுடை**
**போழப் படாஅ முயக்கு"** -1108

என்னும் குறளோடு ஒத்து விளங்குகிறது. காற்று இடையில் புகாதபடி இருக்கி அணைத்துக் கொள்ள வேண்டுமாம். அதுதானே காதலின்பம்!

## 4

வேழமன்னன் ஆதரவுடன், வேலனுக்கும் அன்னத்திற்கும் திருமணமும் முடிசூட்டு விழாவும் ஒருங்கே நடைபெற்றன. புதுமணக் காதலர் சோலையில் இன்புறுங் காட்சி:

**மணித்தவிசில் வீற்றிருந்த பசியகிள்ளை**
**மலர்ச் சோலை தான்புகுந்தே குடமெடுத்தே**
**அணித்தான குளிர் புனலை யேந்தி முல்லை**
**அடிவார்ப்பாள் போல் காட்டிக் கீழ்க்கண்ணோடும்**
**தணிக்காத காதலோடும் அன்புள் ளானைத்**
**தான்பார்த்த படிஇருந்தாள்! வேலன் தேடி**
**பணிச்சியரால் உலவறிந்து விரைவில் அன்னம்**
**பறக்குமுனம் பறந்தின்பம் பகிர்ந்தான் வாழி!**

என உவகைச் சுவையோடும் வாழ்த்தோடும் காவியம் நிறைவு பெறுகிறது.

# 13. சொற்சுவை

எதுகை, மோனை, முரண் முதலிய தொடைகள் மிக்குவரத் தொடுப்பதும், வல்லோசை, மெல்லோசை முதலியன மிக்குவரச் சொற்களை அமைப்பதும், ஒரே சொல், ஒரு பொருளிலோ பல பொருளிலோ மீண்டும் வரத் தொடுப்பதும் சொற்சுவை பயப்பதாகும்.

முதலெழுத்து ஒன்றுவது மோனை, இரண்டாமெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது எதுகைத் தொடை. அடிதோறும் முதல் சொல்லில், முதல் எழுத்தைத் தவிர ஏனைய எழுத்துக்கள் எல்லாம் ஒன்றிவரத் தொடுப்பதால் எதுகை நயமும் ஓசை நயமும், தாள நயமும் போட்டி போட்டுக் கொண்டு சொல்லுக்குச் சுவையூட்டிக் கற்பாருக்குக் கழிபேரின்பம் பயக்கும். இத்தகைய சொற்சுவை பாண்டியன் பரிசில் மிகுந்துள்ளது. சில நோக்குவோம்.

## 1

அன்னத்தை உயிரெனக் காத்து வரும் வேலன் தாய் ஆத்தாவைக் கொல்ல நரியன் ஆட்கள் சென்றுள்ளனர். இதையறிந்து கணக்காயர் சீனி, ஆத்தாவைக் காக்க வேலனை அனுப்புகிறார். வேலன் வாளேந்திக் குதிரையேறிப் பறக்கிறான். வேலனின் நண்பர்கள் தங்களையும் வேலனுக்குத் துணையாக அனுப்ப வேண்டுகின்றனர். இப்பகுதி சொற் சுவை மிக்க பகுதியாகும். ஒரு வீரன் கூறகின்றனான்:

**ஐயாவே! வேலனுக்குத் துணையாய்ச் செல்ல**
**ஐந்தாறு குதிரைகளை எமக்கிப் போதே**
**கையாலே இவையென்று காட்டி விட்டால்**
**கண்ணாலே பார்த்திடுவோம்; அவனழைத்தால்**
**நெய்யாலே மூண்டெழுந்த நெருப்பைப் போலே**
**நெஞ்சாலே கொள்கின்ற விசையினோடு**

வையாலே ஆனதொரு பகைமேற் செல்வோம்
வாளாலே தங்கள் புகழ் வளர்ப்போம் என்றே

இப்பாடலில், ஐயாவே, கையாலே, கண்ணாலே, நெய்யாலே, நெஞ்சாலே வையாலே, வாளாலே என்னும் சொற்கள் எதுகை நயத்தாலும் ஓசை நயத்தாலும் இன்பம் மிகுவிக்கின்றன. இங்ஙனமே அடுத்து வரும் பாக்களும் அமைந்துள்ளன.

இருகை கூப்பி, வருகைக்கு, பருகைக்கு, அருள்கைக்கு என்னும் எதுகையும், இருக்கை, அறிக்கை, வாழ்க்கை, தாழ்க்கை, பதைக்கை, இதைக்கை, அன்புகைக்கும், அவன் பகைக்கும் கைவலுக்கும் என்னும் சொற்களும் ஒரே பாவில் அமைந்து சுவையூட்டுகின்றன.

அடுத்த பாவில், போமாறு தலையசைப்பீர், புதுமாறுதலை வேண்டும், ஆமாறு, அழுமாறு தலையிடாத, ஏமாறுதலையடைந்த, எழில் மாறும், நிலைமாறும், ஆட்சிமாறும், நாம் ஆறுதலையடைய, நகுமாறு தலையிடுவோம் முதலிய சொற்களமைந்து இன்பூட்டுகின்றன. அடுத்த பாட்டைப் பாருங்கள்:

பொறுத்திருப்பார் வாழ்ந்திருப்பார்! இந்த நாட்டில்
புகுந்திருப்பார், இங்கிருப்பார் தம்மை யெல்லாம்
நிறுத்திருப்பார்; இலே சென்று நினைத்திருப்போர்;
நிகழ்வதைக் கண் திருப்பாது பார்த்திருப்பார்!
குறித்திருப்பார் ஆத்தாவைத் தீயோள் என்று
குளிர்ந்திருப்பார்; அவளிறந்தால்! செம்மல் வேலன்
மறந்திருப்பார் வைகாணாதிருப்பார், காண்பார்!
மறைந்திருப்பார், கையிருப்பார் அறிவார் என்றான்.

என்னும் பாவில் சொற்சுவையின்பம் பொங்கி வழிந்து மீண்டும் மீண்டும் படிக்கத் தூண்டுவதை யுணரலாம்.

## 2

நரிக்கண்ணனுக்கு முடிசூட்டு விழா என முரசறைந்து அறிவிக்கப்படுகிறது. இதைக் கேட்ட ஆத்தா அன்னத்திடம் வேதனையுடன் கூறுகிறாள்.

**அடிவைத்தான் கதிர் நாட்டில்! நெஞ்சில் வைத்தான்**
**அழிவைத்தான்! விழிவைத்தான் உரிமைவேரில்!**
**குடிவைத்தான் ஒடிவைத்தான் நாட்டில்! எங்கும்**
**கொலை வைத்தான்! குறைவைத்தான் என்னானாகி**
**வெடிவைத்தான் அறம் வளர்த்த இவ் வீட்டுக்கும்!**
**மின்னொளியே, தன்தலையில் உன்னதான**
**"முடி" வைத்தான்; முழக்குகின்றான்; அன்னோன் வாழ்வின்**
**முடிவைத்தான் முழக்குகின்றான் முரசறைந்தே!**

வஞ்சக நரிக்கண்ணன் கதிர் நாட்டில் அடி வைத்து நுழைந்ததால், அவனது அழிவைத்தான் நெஞ்சில் வைத்தானாம்! உரிமைவேரில் விழிவைத்ததன் மூலம், குடிமக்கள் வாழ்வை ஒடிய வைத்தானாம்! எங்கும் கொலையும் குறையும் வைத்தானாம்! சிறிதும், சிந்திக்காமல் அறம் வளர்த்த வீட்டிற்கே வெடி வைத்தானாம் பாவி! அன்னத்திற்குரிய மணிமுடியை, வஞ்சகன் தன் தலையில் வைப்பதாக முழங்குவது மூலம், அவன் வாழ்வின் முடிவைத்தான் முரசறைந்து முழக்குகின்றானாம்! பாடலை மீண்டும் படித்துப் பாருங்கள்! சொற்சுவையும் பொருட்சுவையும் போட்டியிட்டுக் கொண்டு இன்பந்தருவதை யுணர்வீர்கள்!

## 3

நீலன் வீட்டில் நீலனும் நீலியும் பேசிக் கொண்டிருந்த பொழுது, நீலி நீலனிடம் பூதச் சூழ்ச்சிகளை விளக்கிக் கூறினாள். அதற்கு நீலன் கூறுகின்றான்:

"வாட்படையும் வேற்படையும் கண்டு நெஞ்சம்
மலைப்படையக் குதித்தபூ தத்துக் கெல்லாம்
ஆட்படைதான் அடிப்படையோ? அஞ்சி ஓடி
அலுப்படைந்தேன் இதுகாறும் என்றான் நீலன்.
"மீட்படையா மக்கட்கு மீட்பும், சற்றும்
விழிப்படையா மக்கட்கு விழிப்பும் நல்கத்
தோட்படையால் வையத்தை வெல்லும் வேலன்
துணைப்படையாய் அன்னத்துக்கு அமைந்தான்"

என்றாள். இப்பாவில் 'படை' யென்னும் சொல் பலமுறை பல நிலைகளில் வந்து இன்பூட்டுகிறது. வேலன் அன்னம் ஆகியோர் காதல் பற்றி, நீலனும் நீலியும் பேசிக் கொள்ளும் பேச்சு:

ஆள் பிடிக்குமோ அவளுக்கென்று கேட்டான்,
அடிபிடித்த வேர்கல்லி நூல்பிடித்து
வாள் பிடித்து அறுந்தெடுத்த செம்மரத்தில்
வான் பிடிக்கச் செப்பனிட்ட தேர்போன் றானின்
தாள்பிடித்து வாழ்கின்றாள் அன்னம்! வேலன்
தன்மையெல்லாம் மிகப்பிடிக்கும்! அவளுக்கு அன்னோன்
தோள் பிடிக்கும்; சுவையெல்லாம் பிடித்தெடுத்த
தூயதமிழ் நடைபிடிக்கும் என்றாள் நீலி!

பிடிக்கும் என்னுஞ் சொற்களும், வல்லோசையும் இப்பாவில் இன்பூட்டுகின்றன.

## 4

இரு கூட்டத்தாரையும் மோத விட்டு, அழித்துவிட்டு, இறுதியில் அன்னத்தையும் ஆட்சியையும் பெற விரும்பிய நீலன், நரிக்கண்ணனிடம் சென்று, பெரும்பூதங்கள் வேலனின் ஆட்களே என்ற உண்மையை வெளிப்படுத்தினான். அன்றிரவு நரிக்கண்ணன் ஆட்களில் நூறு பேருக்குப் பூதவேடமிட்டு அரண்மனைக்கு அனுப்பச் சொன்னான்.

வஞ்சக நீலன், வேலன் கூட்டத்தாருக்கும் நல்லவனாக நடித்து, அன்றிரவு, நரியன் ஆட்கள் பூத வேடத்துடன் நூறு பேர் வர இருப்பதைத் தெரிவித்தான்.

அன்னம் வேழ மன்னனிடம் சென்று, நாட்டு மக்களைத் துன்புறுத்தும் பூதங்களைக் கொல்வதற்கு அனுமதி பெற்று வருகிறாள்; மகிழ்வுடன் வந்து வேலன் கூட்டத்தாரிடம் தெரிவிக்கிறாள்.

**இழந்தானோர் ஏழை, பெருஞ்செல்வம் பெற்றான்**
**எனமகிழ்ந்து வரும் அன்னம் தன்னை நோக்கிப்**
**பழந்தானா? என்றான் வேலன், பழுத்த**
**பழந்தான் என்றுரைத்திட்டாள்! அரண்மனைக்கு**
**நுழைந்தாளைத் துறவியவன் கேட்கப் பூதம்**
**நுழைந்தாளைக் கொல்லுவதால் அதை மறித்து**
**முழந்தாளை முறி என்றார் மன்னர் என்று**
**மொழிந்திடவே துறவியவன் மகிழ்வு கொண்டான்.**

இப்பாடலில், இழந்தான், பழந்தான், நுழைந்தாளை, முழந்தாளை என்னுஞ் சொற்கள் மெல்லோசையுடன் வந்து இன்பூட்டுகின்றன. மேலும் 'நுழைந்தாளை' என்னுஞ் சொல், 'நுழைந்த அன்னத்தை' என்னும் பொருளில் ஓரிடத்திலும், 'நுழைந்து ஆளை'க் (கொல்லுவதால்) என்னும் பொருளில் வேறு ஓரிடத்திலும் வந்து, சொற் பின் வருநிலையணியாக இன்பூட்டுகிறது.

இரு கூட்டத்தாரும் ஆவலுடன் எதிர்நோக்கிய இரவு நேரமும் வந்து விட்டது. நரியன் ஆட்கள் நுற்றுவர் பூத வேடத்தில் வந்து கொண்டு உள்ளனர். இச்செய்தியை அன்னத்தின் ஆள்வந்து, அன்னத்திற்கு ஆதரவாகத் துறவி வேடத்திலுள்ள வீரப்பனிடம் வந்து கூறுகின்றான்.

**சேறுண்டு நடவுண்டுஎன் றிருப்பார் தாமும்**
**திருவுண்டு கடையுண்டு என்றிருப்பார் தாமும்**

வீறுண்டு வாளுண்டு என்றிருப் பார்தாமும்
வினவுண்டு படிப்புண்டு என்றி ருப்பார்தாமும்
சோறுண்டு மனைமக்க ளோடு சென்று
துயிலுண்டு கிடக்கின்ற இரவில் ஓராள்
நூறுண்டு பூதங்கள் வருவதை நான்
நோக்கியதும் உண்டென்றான் துறவியின்பால்!

இப்பாடலில், 'உண்டு' என்னுஞ் சொல்லும், 'என்றிருப்பார் தாமும்' என்னுந்தொடரும் பன்முறை வந்து படிப்பதற்குச் சுவையூட்டுகின்றன.

## 5

வேலன் கூட்டத்தாரால் நூறு பூதங்களும் வெட்டி வீழ்த்தப்பட்டன! பூத வேடத்தில் இருந்து வஞ்சக நரிக்கண்ணனை, அன்னமே தன் கையால் வெட்டி வீழ்த்திப் பழி தீர்த்துக் கொண்டாள்! சாப்பாட்டுப் பொன்னப்பனும் வீழ்த்தப்பட்டான்.

நிகழ்ந்தவற்றை, நீலனின் தந்தை கூறக் கேட்ட துறவியின் கூற்று:

தேரோடு வீதியிலே கதிர் நாட்டானின்
செந்நீரோடும் வண்ணம் வஞ்சஞ் செய்தும்
காரோடு நிகழ்குழலாள் அரசி தன்னைக்
கனிவோடு பேசித்தன் கையால் மாய்த்தும்,
சீரோடு வாழ்ந்திருக்க நினைத்தான், அந்தத்
தீயோனும் தீர்ந்தான்; தன் குடித்தனத்தை
வேரோடும் தீர்த்திட்டான்! இரங்குகின்றேன்.
மேல்என்ன விளைந்ததெனத் துறவி கேட்டான்.

இப்பாவில் – தேரோடு, செந்நீரோடும், காரோடு, கனிவோடு, சீரோடு, வேரோடும் என்னும் எதுகைச் சொற்கள் வந்து சுவையூட்டுகின்றன. மேலும், கனிவோடு பேசித் தன் கையால் மாய்த்தும், வாழ்ந்திருக்க நினைத்தான் தீர்ந்தான் என்னும் முரண் தொடைகளும் சுவை பயக்கின்றன.

# 6

வஞ்சகங்களைனைத்தும் வெட்டி வீழ்த்தப்பட்டு, குழப்பங்கள் தீர்ந்தபின், 'சன்னலிலே தென்றல் வந்து குளிர்விளைக்கும் தனியறை'யில் இருக்கும் வேலன், 'கன்னலிலே சாறெடுத்துத் தமிழ் குழைத்துக் கனியிதழால் பரிமாறும் இனிய சொல்லாள் அன்னத்தின் மேல்' நெஞ்சை வைத்துப் பற்பல கூறுகின்றான்.

**விண்ணிடையே பன்னூறாயிரம் மீன்கட்கு**
**வெண்ணிலவு போலந்த மங்கை அன்னம்,**
**மண்ணிடையே பெண்ணினத்துக்கு ஒருத்தி அன்றோ?**
**வாழ்விடையே பெருவாழ்வு வாழ்ந்தாள்; என்றன்**
**கண்ணிடையே மலர்க்காடானாளே! உள்ளக்**
**கருத்திடையே மணமானா ளேஎன் செய்வேன்!**
**நுண்ணிடையாள் எனக்குத்தா னோஅல்லாது**
**நோயிடையே சாகத்தான் பிறந்துள் ளேனோ?**

இப்பாடலில்–விண்ணிடையே, மண்ணிடையே, வாழ்விடையே, கண்ணிடையே, கருத்திடையே, நுண்ணிடையாள், நோயிடையே முதலிய சொற்களின் அமைப்பு சுவை பயக்கின்றது. இன்னுஞ் சில பாக்களில் தொடர்ந்து இங்ஙனம் சொற்சுவை அமைந்துள்ளது.

தேனைப் போல், மீனைப்போல் ஆகிய சொற்கள் ஒரு பாடலிலும்–பயிரடைந்த, உயிரடைந்த, ஒளிடையந்த, பெயரடைந்த, பெண்ணடைந்த உயர்வடைந்தாள் என்னுஞ் சொற்கள் ஒரு பாடலிலும் அமைந்து சொற்சுவை பயக்கின்றன.

**கொம்பென்றால் அவள் மெய்யைத் தார்வருந்தும்!**
**கொடியென்றால் அவளிடையை மின்வருந்தும்!**
**அம்பென்றால் அவள் விழியை மீன் வருந்தும்!**
**அலையென்றால் அவள்குழலை முகில் வருந்தும்!**
**செம்பென்றால் பொன்சுயும் வாழ்வு வாய்ந்தாள்**
**செயலென்றால் 'உளம்வாய்மெய் உனக்கே ஆகும்**

**நம்பெ'ன்பாள்! எனக்குத்தானோ அல்லாது**
**நலிவுற்றுச் சாகத்தான் பிறந்திட்டேனோ!**

இப்பாடலில் – கொம்பென்றால், கொடியென்றால், அம்பென்றால், அலையென்றால், செம்பென்றால், செயலென்றால், நம்பென்பாள் முதலிய சொற்கள் சொற்சுவை பயக்கின்றன. அதுமட்டுமா? கவிச்சுவையும், உவமைச்சுவையும் கூட அமைந்துள்ளன.

அன்னத்தின் உடலுக்குப் பூங்கொம்பை உவமை கூறினால், பூமாலை தன்னை உவமை கூறவில்லையே என வருந்துமாம்! இடைக்குக் கொடியை உவமை கூறினால் மின்னல் வருந்துமாம்! விழிக்கு அம்பை உவகை கூறினால் மீன் வருந்துமாம்! கூந்தலுக்குக் கடலலையை உவமை கூறினால் கருமேகம் வருந்துமாம்!

இப்பாடலில்–சொற்சுவை, கவிச்சுவை, உவமைச்சுவை ஆகிய மூன்றும் போட்டி போட்டுக் கொண்டு இன்பம் பயக்கின்றன.

மேலும் காப்பியத் தலைவியாகிய அன்னத்தின் பண்பையும் இப்பாடல் விளக்குகிறது. செம்பு கேட்டால், பொன்னையே கொடுக்கும் கொடைப்பண்பினள் அன்னம்!

செயலென்றால், 'என் உள்ளம், சொல், உடல் அனைத்தும் உனக்கே;' நம்பு! என்பாளே! இத்தகைய தலைவி எனக்குக் கிடைப்பாளா? அல்லது அவளை எண்ணியெண்ணி, நலிந்து போய்ச் சாகத்தான் நான் பிறந்தேனோ! என்று தலைவன் ஏங்குகின்றான்.

இங்ஙனம்–சொற்சுவை, கவிச்சுவை, உவமைச்சுவை, காதல் சுவை, தலைவியின் பண்பு, தலைவனின் ஏக்கம் ஆகிய இவ்வளவையும், ஓர் எண்சீர் விருத்தப்பாவில் வைத்துப் பாடியுள்ள பாவேந்தரின் திறன் வியந்து வியந்து போற்றுதற்குரியதாகும்!

ஆ! மற்றொன்று மறந்து விட்டேனே! 'வருந்தும்' என்னும் சொல் ஒரே பொருளில் பன்முறை வந்து சொற்பொருட்பின் வருநிலையணியும் இப்பாவில் அமைந்துள்ளது! இன்னும் எவ்வளவு புதைந்துள்ளனவோ? சுவைஞர்களே! மீண்டும் மீண்டும் படித்துச் சுவைத்தின்புறுங்கள்! ஆய்ந்து தோண்டி, புதைபொருள்களைக் கண்டு மகிழுங்கள்!

## 14. பொருட்சுவை

உடலும் உயிரும் போல், சொல்லும் பொருளும் இரண்டறக் கலந்தவை. உயிரற்ற உடல் பயனற்றதுபோல், பொருளற்ற எழுத்துக் கூட்டு பயனற்றது. அது சொல்லாகாது.

சான்றோரின் செயலுக்கு மதிப்பிருப்பினும், சில சான்றோர் இணைந்து செய்யும் செயலுக்கு எல்லையற்ற மதிப்பும் எல்லையற்ற பயனும் உண்டாகும். அதைப் போல், ஒவ்வொரு சொல்லுக்கும் தனித்தனிப் பொருளிருப்பினும், சிறப்புடைய சில சொற்களின் சேர்க்கையால், உயர்ந்த இலக்கிய மதிப்பும், சிறந்த பொருளும் உண்டாகின்றன.

தேன் என்னுஞ் சொல்லும், தமிழ் என்னும் சொல்லும் தனித்தனிச் சிறப்புடையவையாயினும், அவ்விரண்டையும் இணைத்து, 'தேன்தமிழ்' என்று சொன்னவுடன், 'தேன் போன்ற இனிய தமிழ்' என்னும் சிறந்த பொருளும் உயர்ந்த இலக்கிய மதிப்பும் உண்டாகின்றன. பாளை என்னுஞ் சொல்லையும் சிரிப்பு என்னுஞ் சொல்லையும் இணைத்து 'பாளைச் சிரிப்பு' என்று சொன்ன உடன், ஓரழகிய இளம் பெண்ணின் புன்னகையை, நம்முன் நிறுத்தும் ஆற்றல், அதற்கு உண்டாகி விடுகிறது. இத்தகைய சொற் சேர்க்கைகளால் உருவான பாடல், பொருள் சுவையும் இலக்கிய மதிப்பும் பெற்றுவிடும்.

இனி, பாண்டியன் பரிசு நல்கும் பொருள் சுவைகள் சிலவற்றைச் சுவைப்போம்.

# 1

கதிர் நாட்டரசனும், அவன் மனைவியும் மகிழ்ந்திருக்குங் காட்சியைக் கவிஞர் விளக்குகிறார்:

**கதிர்நாட்டின் கதிரைவேல் மன்னன் தானும்**
**காதல் மனையாம் கண்ணுக்கினியாள் தானும்**
**சதிராடு கூடத்தில் தவிச மர்ந்து**
**தமிழ்ப்பூவால் இசைப்பாக்கள் புனைந்திருந்தார்.**

**........................**

அரசியின் பெயர் கண்ணுக்கினியாள் என்பது. சிலருடைய பெயருக்கும் இயல்புக்கும் சிறிதும் பொருத்தமிருக்காது. ஆனால் அரசியோ, பெயருக்கேற்ப அழகும் உடையவள். மன்னனது கண்ணுக்கு மட்டும் அல்லாமல் மனத்திற்கும் இனியவளாக – நல்லவளாக – சிறந்த மனைவியாக – இருந்தாள். "காதல் மனையாம் கண்ணுக்கினியாள்" என்னுந் தொடர், மேற்குறித்த பொருட்சிறப்பை உணர்த்துகிறது.

அரசனும் அரசியும் எங்கே, எப்படி இருந்தனர்? நடன அரங்கத்தில், நாட்டியமாடும் பெண்கள் நாட்டியமாட, அந்நாட்டியத்திற்கேற்ற இசைப்பாக்களை இனிய தமிழில், காதலர் பாடி மகிழ்ந்திருந்தனர். "சதிராடு கூடத்தில் தவிசமர்ந்து, தமிழ்ப்பூவால் இசைப்பாக்கள் புனைந்திருந்தார்" என்னுந் தொடர் அருமையான தொடராகும். நறுமணமலரால் அழகிய மாலை தொடுப்பதுபோல், இனிய தமிழ்ச் சொல்லால் இசைப்பாக்கள் பாடினாராம்.

இங்ஙனம் அவர்கள் இன்புற்றிருக்கும்போது, வஞ்சக நரிக்கண்ணன் சூழ்ச்சியால் வேழ நாட்டுப்படை, கதிர் நாட்டைத் தாக்க வரும் செய்தியைக் கதிரை வேலன் உணர்ந்து, மனவேதனையுடன், "என் கண்ணுக்கினியாளே! அன்பே!" என்று மனைவியை விளித்துக் கூறுகிறான்.

இந்நாட்டை உன் அண்ணன் பெறநினைத்தான்!
என்படையின் தளர்நிலையை அவனையல்லால்
பின்எவரும் அறியாரே! உடன் பிறந்தான்
பெரும் பகைவன் எனக்கு! நெடு வைய மீதில்
என்ஆவி போன்றவள் நீ! என்ன செய்வேன்!
என்வெற்றி உன் துன்பமன்றோ பெண்ணே!
மன்ன வன்நான்! எனைநம்பி வாழுகின்ற
மக்கட்கோ என்கடமை ஆற்றவேண்டும்.

தன் மைத்துனனே – ஆவிபோன்ற மனைவியின் அண்ணனே – பெரும் பகைவனாய் வந்துள்ளான்! நாட்டு மக்களைக் காக்கப் போரிட்டே ஆகவேண்டும். தனது வெற்றியே உயிர் போன்ற மனைவிக்குத் துன்பம்! என் செய்வான் மன்னன்? அவனது அறத் தொல்லை (தரும சங்கடம்) ஆனநிலையை மேல்பாட்டின் ஒவ்வொரு சொல்லும் உணர்த்துவதை அறியலாம்.

வீரமங்கை கண்ணுக்கினியாள், சீறியெழுந்து, வஞ்சக அண்ணனைப் போரில் கொல்வதாகச் சூளுரைத்துப் போருக்குச் சென்றபின், சோலையில் விளையாடிக் கொண்டிருந்த மகள் அன்னம், போரின் பேரொலியைக் கேட்டுத் துடித்தாள்!

"வாட்போரை விரும்பும் அவள் தமிழ் நெஞ்சம்!
வகையறியா அவள்இளமை மறுத்து நிற்கும்!"

அவள் மனதிற்குள்ளும் போராட்டம்! தமிழ் நெஞ்சம், 'நீயும் போருக்குக் கிளம்பு' என்கிறது. கன்னிப்பருவமோ, வேண்டாமெனத் தடுக்கிறது. என் செய்வாள் பாவம்?

"வகையறியா அவள் இளமை" – கன்னிப் பருவத்தை விளக்கும் அருமையான சொற்றொடர்!

செவிலித்தாய் ஆத்தாளின் சொல்லும் செயலும்' அன்னத்தின் மிக்க இளமையைத் தெளிவாகவும் நயமாகவும் விளக்குகின்றன.

"இந்நிலையில் இறக்கை முளைக்காத அன்னம்
ஏன் பறக்க நினைக்கிறாய்? முடிவு காண்போம்!
கன்னலின் சாறே! இங்கு வந்து அமர்வாய்,
கைப்புறத்தில்வா! என்று சென்றணைத்தாள்!

"இறக்கை முளைக்காத அன்னம்!" – அன்னத்தின் கன்னித் தன்மையை–மிக்க இளமையை –விளக்குகின்ற அருமையான சொற்றொடர்!

தாய்ப்பறவை, தன் குஞ்சை இறக்கையால் அணைத்துக் காப்பதைப் போல, ஆத்தாள் அன்னத்தை, "கைப்புறத்தில் வா! என்று சென்றணைத்தாள்!"

## 2

வஞ்சக நரிக்கண்ணன், கயமையின் உச்சநிலையை மேற்கொண்டு, வஞ்சகமாகவே தன் மாமனையும் தன் தங்கையையும் கொன்று விடுகிறான். இக்கொடுமையைக் கேள்வியுற்ற வேழநாட்டு மன்னன்,

" .......... மக்களிடை மகனாய் வாழ
ஒன்னாத கொடுவிலங்கை இந்நாள்மட்டும்
தெரியாதேன் வைத்திருந்தேன் அரண்மனைக்குள்!
தீருவது எந்நாள் இந்தப் பழிதான் ......."

என்று கூறி வருந்துகிறான்.

அரசனிது கூறுங்கால் அங்கிருந்த
அழிவொன்றே தொழிலான மறவர் தாமும்
இரக்கமுற லானார்கள்! நரைத்த தாடி
இளைத்தஉடல் களைத்தவிழிக் கிழவன், "வேந்தே,
கரிப்பின்றேல் கனியருமை யாரே காண்பார்?
காயின்றேல் கனியருமை யாரே காண்பார்?
நரிக்கண்ணர் இலையெனில் நும்அருமை தன்னை
நானிலந்தான் அறிந்திடுமோ? நவில்க?

என்றான்.

நரியனின் கயமைச் செயல்களைக் கேட்டு, கொலையே தொழிலாகக் கொண்டவர்களும் மனமிரங்கி வருந்தினார்களாம். கிழவனொருவன் கயவனோடு காவலனை–மன்னனை–ஒப்பிட்டு அவனுயர்வைப் பாராட்டுவதற்குக் கூறும் உவமைகள் நயமாக உள்ளன.

காரமில்லாவிட்டால் இனிப்பின் அருமை தெரியுமா? காயில்லாவிட்டால் கனியின் அருமை தெரியுமா? அவை போல, நரிக்கண்ணன் இல்லாவிட்டால், உமது அருமையை உலகம் எப்படி அறியும் என்று கேட்பது நயமாக உள்ளது.

"நரைத்த தாடி; இளைத்த உடல்; களைத்த விழிக் கிழவன்" என்பது சிறந்த சொல்லோவியமாக அமைந்துள்ளது.

## 4

நீலன் வீட்டில், நீலனும் நீலியும் பேசிக் கொண்டிருக்கும் பொழுது, அவர்கள் காதலின்பம் துய்த்ததைக் கூறும் பாடல் நயமாக அமைந்துள்ளது.

**வட்டிலிட்ட வெற்றிலைக்குச் சீவல் நெய்யால்**
**வறுத்தெடுத்து நிறுத்தநிறை மணமும் சேர்த்துத்**
**தட்டிலிட்டுச் செம்பினிலே இன்பால் பெய்து**
**தனித்தனியே முக்கனியின் சுளையும் இட்டுப்**
**பட்டிலிட்ட மேல்விரிப்பில் பூவடிப்பைப்**
**பாரெல்லாம் மணம்பரவத் தெளித்துத் தங்கக்**
**கட்டிலிட்ட அறைகாட்டி நீலிதோள் மேல்**
**கையிட்டான்; பெருவீடு கமழச் சென்றார்.**

இப்பாட்டில், காதலின்பத்திற்குரிய படுக்கையறை வருணனை சிறந்த சொல்லோவியமாகக் காட்டப்படுகிறது. "தங்கக் கட்டிலிட்ட அறை காட்டி, நீலி தோள்மேல் கையிட்டான். பெருவீடு கமழச் சென்றார்" என்னும் பகுதி, அவர்கள் இன்பம்

துய்த்ததை நயமாக விளக்கும் பகுதியாகும். 'பெருவீடு' என்று ஏன் சொன்னார்? அதன் பொருள் என்ன?

சிற்றின்ப வாழ்விற்குரியது சிறு வீடு. பேரின்ப வாழ்விற்குரியது பெருவீடு–வீட்டுலகம் (மோட்சம்). திருக்கோவையார் பாடிய மாணிக்கவாசகர் முதல், சிறந்த ஞானிகள் எல்லாம், பேரின்பம் பெறுதற்குச் சிற்றின்பத்தை வழியாகக் கூறியுள்ளதைப் பின்பற்றிப் புரட்சிக் கவிஞரும், "பெருவீடு கமழச் சென்றார்" என்றார். 'பெருவீடு' என்பது சிறந்ததும் புதியதுமான சொல்லாக்கமாகத் திகழ்கின்றது.

**"தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்**
**தாமரைக் கண்ணான் உலகு"** **-குறள் 1103**

என்னும் குறட்பாவையும், "பெருவீடு கமழச் சென்றார்" என்னும் தொடரையும் ஒப்பிட்டு மகிழ்க.

# 15. உவமைச் சுவை

எடுத்துக் கொண்ட பொருளை விளக்கவும், பாட்டிற்கு அழகு சேர்க்கவும், கற்பாருக்குச் சுவையூட்டவும் கவிஞன் கையாளும் உத்திகளுள் தலைசிறந்தது உவமையாகும். 'பாட்டினைப் போல் இன்பம் பாரின் மிசை இல்லையடா!' என்றார் பாரதியார். "உவமையினைப் போல் இன்பம் உலகிலே இல்லையடா!" என்பேன்யான். "தொடையற்ற பாட்டு நடையற்றுப் போகும்" என்பார்கள். "உவமையில்லாப் பாட்டு உப்பில்லா உணவு" என்பேன் யான்.

'திருக்குறள் தரும் உவமையின்பம்' (செல்வி பதிப்பகம், 'சிந்தாமணி நயம்' (மணிவாசகர் பதிப்பகம்) ஆகிய என் நூல்களில், உவமையின் பேராற்றலை–உவமைச் சுவையின் உயர்வை–விளக்கியுள்ளேன். இரண்டாம் நூலில், 'தங்க உவமை' என்னுந் தலைப்பில், உவமையின் சிறப்பைப் பற்றிக் கூறியுள்ள கருத்துக்களுள் சிலவற்றை மட்டும் இங்கு எடுத்துக் காட்டுகிறேன்.

"சொற்களால் எளிதில் விளக்க இயலாத கருத்தை, மிக எளிதாக விளக்க வல்லது உவமை! உள்ளத்துணர்வை எளிதில் வெளிப்படுத்த வல்லது உவமை! கவிதைக்கு உயிர் நாடியான கற்பனைக்கு, உயிர்நாடியாகத் திகழ்வது உவமை! உயிருக்கு உயிராக இருந்து உலகை இயக்கும் இறைவனைப் போல, கவிதையைத் திறம்பட இயக்குவது உவமையே. கவிதைக்கு உரமூட்டும் கற்பனைக்கும் வருணனைக்கும் உரமூட்டவல்லது உவமையே!"

"தங்கம் எல்லா நகைகளுக்கும் மூலமாக இருப்பதோடு மதிப்பு மிக்கதுங்கூட உவமையும் அங்ஙனமே எல்லாவகைப் பாவணிகளுக்கும் மூலமாகவும் மதிப்பு மிக்கதாகவுந் திகழ்கிறது. அதனால் 'தங்க உவமை" யெனல் மிகப் பொருந்தும்."

சங்ககாலத்திலேயே, தாம் கையாண்ட உவமைச் சிறப்பினால் பெயர் பெற்ற புலவர் பலராவர். அவர்களுள், 'செம்புலப் பெயல் நீரார்', 'அணிலாடு முன்றிலார்', 'தேய்புரிப் பழங் கயிற்றினார்', 'ஒரேருழவர்' முதலியோர் குறிப்பிடத் தக்கவராவர்.

இந்த இருபதாம் நூற்றாண்டில், உவமையால் சிறப்புற்ற 'உவமைக் கவிஞர் சுரதா' அவர்களை அறியாதார் யார்?

புரட்சிக் கவிஞர்–பாவேந்தர்–பாரதிதாசன் அவர்களும், உவமைகளை, அறுபதுக்கு மேற்பட்ட இடங்களிலும், புதுமையாகவும் கையாண்டுள்ளார்கள். பாண்டியன் பரிசில் வரும் சில உவமைகளைச் சுவைப்போம்.

# 1

புல்லூர்ச் சிறு குடிசையில் இரண்டு புண்பட்ட நெஞ்சங்கள் வருந்திக் கொண்டிருக்கின்றன.

**"நரைபட்ட ஆத்தாளின் நெஞ்சம் ஒன்று!**
**வல்லூறு குறிவைத்த புறாப்போல் வாழும்**
**மலர்க் கொடியாள் அன்னத்தின் உள்ளமொன்று"**

புறாவை விட வலியதும், புறாவின் இறைச்சியில் மிக்க விருப்பம் உடையதுமாகிய 'வல்லூறு' என்னும் பறவை, புறாவைக் கண்டுவிட்டால், அதைப் பற்றுவதற்காக வானில் வட்டமிட்டுக் கொண்டே இருக்கும்; பதுங்கியிருக்கும் புறா வெளிப்படும் வரையிலோ, அருகிலிருக்கும் மனிதர் நீங்கும் வரையிலோ, அப்பகுதியைச் சுற்றி வானில் வட்டமிட்டுக் கொண்டே இருக்கும். அக்கொடிய வல்லூறு நீங்கும் வரை, அழகும் மென்மையும் இனிமையும் வாய்ந்த புறா அஞ்சி நடுங்கிப் பதுங்கியிருக்கும். அதைப்போல,

கதிர் நாட்டின் ஆட்சியில் கண்வைத்த வஞ்சக–கொடிய நரிக்கண்ணன், அரசனையும் அரசியையும் வஞ்சித்துக் கொன்ற பின், ஆட்சிக்கு உரியவளும், அழகும் மென்மையும் இனிய பண்பும் உடையவளுமாகிய அன்னத்தைக் கொல்வதற்குச் சுற்றித் தேடித் திரிந்து கொண்டிருக்கிறான். அக்கொடியவனிடமிருந்து, தன் கற்பையும் உயிரையும் காத்துக் கொள்வதற்காக, அன்னம் அஞ்சி நடுங்கி ஆத்தாளுடன் குடிசையில் பதுங்கியிருக்கிறாள்; 'வல்லூறு குறிவைத்த புறாப்போல்' வாழ்கிறாள்.

ஆத்தாள், அன்னத்தின் பெற்றோருக்கு ஏற்பட்ட நிலையையும், அன்னத்திற்குள்ள நிலையையும் எண்ணியெண்ணி அழுகிறாள். அன்னத்தின் தாய் கண்ணிக்கினியாள், மகளின் எதிர்கால இன்ப வாழ்வைப் பற்றிக் கற்பனை செய்ததையும், அவளுக்கு நேர்ந்த நிலையையும் எண்ணியழுகிறாள்.

**அருமைமகள் தனக்கேற்ற அன்பனோடும்**

**ஆணிப்பொன் கட்டிலெனும் சேற்றி னுள்ளே**

**எருமையெனக் கிடந்தின்பம் நுகரு கின்ற**

**எழில்நாளை நான்காணப் பெறேனோ என்ற**

**பெருமாட்டி மொழிஎண்ணி அழுவே னாநான்?**

**பிள்ளைக்கு நஞ்சூட்டும் தாய்போல் அந்த**

**நரிக்கண்ணன் வஞ்சித்துக் கொன்ற போது**

**நாளற்றுப் போனதெண்ணி அழுவேனாநான்?**

எருமையால் கோடைக்கால வெப்பந் தாங்க முடியாது. அப்பொழுது, சேற்று நீர் என்றால் எருமைக்குக் கொள்ளை விருப்பம். கோடைக்காலத்தில் சேற்று நீர்க் குட்டையில் எருமை இறங்கி விட்டால், அது சேற்றில் படுத்துப் புரண்டு அனுபவிக்கும் இன்பத்திலிருந்து மீளவே மனம் வராது.

அது போலப் புது மணத் தம்பதிகள், இரவில் கட்டிலில் படுத்துவிட்டால், பிறகு அதிலிருந்து எழுந்திருக்கவே மனம் வராது. கட்டிலென்னும் சேற்றினுள்ளே, அன்னம், தன் அன்பனோடு கிடந்தின்பம் துய்க்கும் நன்னாளையெண்ணி ஏங்கினாளாம் அன்னத்தின் தாய்.

இப்பாடலில் முற்பகுதியில், 'கட்டிலெனும் சேறு' என்னும் உருவகமும், 'எழில்நாளை நான் காணப் பெறேனா' என்னும் தாயின் ஏக்கமும் கலந்து, மிகச் சுவையூட்டுகின்றன. இனிப் பிற்பகுதியை நோக்குவோம்.

பிள்ளைக்குப் பாசத்துடன் பாலூட்டிவளர்க்க வேண்டிய தாயே, கள்ளக் காதலுக்கு இடையூறு என்ற காரணத்தால் நஞ்சூட்டிக் கொள்வது, எவ்வளவு கொடிய கயமை! தங்கையைக் காக்க வேண்டிய கடமையுடைய அண்ணனே, நாடாளும் தகாத ஆசையால், வஞ்சித்துக் கொன்ற செயல், 'பிள்ளைக்கு நஞ்சூட்டும்' செயல் போல் மிகக் கொடிய கயமைச் செயல்.

பிள்ளைக்கு நஞ்சூட்டிக் கொல்லும் தாய் உலகில் இல்லை. ஆனால், உடன் பிறந்தாரையும், பெற்றோரையும் கொல்லும் கயவர்கள், அரசியல் வரலாற்றில் என்றும் உள்ளனர்!

நரிக்கண்ணனின் கயமைக்கு, 'பிள்ளைக்கு நஞ்சூட்டும் தாய், இல் பொருளுவமையாகிச் சுவை பயக்கிறது.

உலகோர் யாவரும் உடன் பிறந்தாராக வாழ விரும்பும் இவ்வுலகில், தன் மாமனின் கொடுமையை எண்ணி, அன்னம் வருந்துகிறாள். உலகம் எத்தகையது?

**"சுரந்தபால் இருந்தருந்திப் பரந்துலாவும்**
**நெடும்பன்றிக் குட்டிகள் போல் மக்கள் யாரும்**
**நிறையன்பால் உடன்பிறந்தார் என்றுணர்த்தக்**
**கிடந்துதவம் புரிகின்ற உலகில் ........"**

பன்றிக்குட்டி பாலருந்தும் பொழுது, ஒரு மாரில் வாய் வைத்தால் இறுதிவரை அந்த மாரில் மட்டுமே அருந்தும்; வேறு மாரில் வாய் வைக்காது. ஒவ்வொரு குட்டியும் ஒவ்வொரு மாரில் மட்டுமே அருந்துவதால், அவற்றுக்குள் போட்டி, பொறாமை, பூசல் முதலியன ஏற்பட வழியில்லை. அவை சகோதர பாசத்துடன் வளருகின்றன.

அதைப்போல், எல்லா மக்களும் நிறைந்த அன்புடன் உடன் பிறந்தாராக வாழ வேண்டும் என உலகம் தவம் புரிகின்றது. உலகச் சமாதானத்திற்காகச் சான்றோர் அயராது முயல்கின்றனர். இந்த உலகில், தாய்மாமனாகிய நரிக்கண்ணன், நாட்டாசையால் செய்கின்ற கொடுமைகளை எண்ணி அன்னம் வருந்துகிறாள்.

## 2

துயரில் மூழ்கியிருக்கும் அன்னத்தின் துயரைக் குறைக்க, அவள் தோழி நீலி, மாலை நேரத்தில் செய்யாற்றில் படகில் உலாவிக் களிக்க அழைக்கிறாள். இருவரும் படகில் ஏறி

அமர்கின்றனர். இரு பெண்களைப் படகு தாங்கும் காட்சி எப்படியுள்ளது?

"நீர்தேங்கும் செய்யாற்றில் ஓடம், துன்பம்
நினைந்தேங்கும் அன்னத்தை நீலியைப்பூந்
தார்தாங்கும் தட்டம்போல் தன்பால் தாங்க"

அழகும் மென்மையும் மங்கலமும் வாய்ந்த இரண்டு மணமலர் மாலைகளைத் தாங்கும் தாம்பாளத் தட்டுப் போல, அழகும் மென்மையும் இளமையும் கற்பும் வாய்ந்த இரண்டு கன்னிப் பெண்களைப் படகு தாங்கியுள்ளது.

'தாங்குதல்' என்றால் என்ன? துன்பம் நேராமல் காத்தல். மலர்மாலைகள் சிறிதும் சிதையாமல் தாம்பாளம் தாங்குவது போல், இளம்பெண்கள் சிறிதும் வருந்தாமல், அவர்களைப் படகு தாங்கிச் செல்கிறதாம். எவ்வளவு அழகான–வளமான–பொருத்தமான–புதுமையான–உவமை!

கோடைக்காலத்தில் செய்யாற்றில், வெள்ளப் பெருக்கின்றித் தெளிந்த நீர் மெதுவாக ஓடுகின்றது. அதில், அன்னப்பறவை அசையாது நீந்துவது போல் படகு செல்கின்றது.

"சீர்தேங்கும் வெள்ளன்னம் அசைந்திடாது
செல்லல்போல் தெண்ணீரில் சென்றதோடம்"

இவ்வுவமையுடன், "மடஅன்னக்கதியது செல" என்னும் கம்பர் உவமையை ஒப்புநோக்குக.

மாலை போன்ற பெண்கள், மாலை வானத்தின் இயற்கையழகைக் கண்டு சுவைத்து, மால் (மயக்கம்) கொண்டிருக்க, படகு கிழக்கு நோக்கிச் சென்று கொண்டு இருக்கிறது.

திடீரென்று, வானத்தில் கரு மேகங்கள் சூழ்கின்றன! கேள்வியறிவில்லாதவர் நெஞ்சம் அறியாமையால்

இருண்டிருப்பது போல், வானத்தில் இருள் சூழ்கின்றது! சிக்கலான–பெரிய–வழக்கு ஒன்றை நீதிமன்றத்திற்குக் கொண்டு செல்வோர் செல்வம் மறைவது போல் வானத்தில் மின்னல் தோன்றி மறைகின்றது! வழக்கு மன்றத்திற்குப் பலமுறை சென்றும், வழக்கறிஞர்களுக்குக் கொடுத்தும் வளமான பெருஞ்செல்வம் முழுவதையும் இழந்தவனுடைய உள்ளம் அதிர்வதுபோல் வானம் இடிஇடித்து அதிர்கின்றது! செல்வத்தையும் இழந்து வழக்கிலும் தோற்றபின், அவன் கண்ணீர் வடித்து அழுவது போல் வானம் மழை பொழிகின்றது!

மேற்கிலிருந்து வெள்ளம் பெருக்கெடுத்து வருகின்றது! பழக்குலை மேல் வீசப்பட்ட குறுந்தடிபோலப் படகை நோக்கிப் பெருங்காற்று பாய்ந்து வீசுகிறது!

இவ்வளவு உவமைகளையும் உள்ளடக்கிய பாடலை நோக்குவோம்.

**கிழக்கிளைநோக் கிப்படகு செல்லும் போதில்**
**கேள்வியிலார் நெஞ்சம்போல் இருண்டு, நீளும்**
**வழக்குடையார் செல்வம்போல் மின்னி மாய்ந்து,**
**வண்பொருளை யிழந்தான் போல் அதிர்ந்து, பின்னர்**
**மழைக்கண்ணீர் உகுத்ததுவான்! மேற்கி னின்று**
**வந்ததுசெய் யாற்றினிலே பெரிய வெள்ளம்!**
**பழக்குலை மேல் எறிந்தகுறுந் தடியே போலப்**
**பாய்ந்ததொரு பெருங்காற்று படகு நோக்கி;**

ஒரு பாடலில் எத்தனை உவமைகள்! கோடைமழை பொழியும் வானத்தில் ஒவ்வொரு நிலைக்கும் ஒவ்வொரு உவமையாக, ஐந்து சிறந்த உவமைகளை ஒரே விருத்தத்தில் காட்டி, நீதி மன்றம் செல்லாமல் சமாதானமாக வழக்கைத் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்ற நீதியையும் உணர்த்தும் கவிஞரின் திறத்தை எப்படிப் பாராட்டுவது?

"கேள்வியிலார் நெஞ்சம் போல் இருண்டு" என்னும் உவமையுடன், "ஏழைய ருள்ளமென்ன இருண்டன திசைகள் எல்லாம்" என்னும் கம்பர் கூற்றையும் ஒப்பிட்டு மகிழ்க.

# 3

நீலனும் நீலியும் பேசிக் கொண்டுள்ளனர். நீலி அன்னத்தின் நிலைபற்றிக் கூறுகிறாள்.

**"கூடுவிட்டுத் தாயைவிட்டுப் பறந்து விட்ட**
**குயிற்குஞ்சு போலன்னம் ஒருத்தி..."**

அன்புப் பெற்றோரையும், உரிய அரசையும் இழந்து தவிக்கும் அன்னத்திற்கு, கூட்டையும் தாயையும் பிரிந்து விட்ட குயில் குஞ்சு பொருத்தமான உவமையாக்கிச் சுவையூட்டுகிறது.

அவளழகு எத்தகையது? பொன்னை நறுக்கும்போது வீசுகின்ற ஒளிபோன்று ஒளியுடைய உடலையுடையவள்.

**"நறுக்கையிலே பொன்வீசும் ஒளியால் செய்தே**
**எடுக்கையிலே அமைவுற்ற மேனியாள்..."**

மின்னலையும், பல மலர்களையும் கொண்டு செய்யப் பட்டதைப் போன்ற உடலையுடையவள்.

**"மின்னையும் பன் மலர்களையும் கொண்டு யாக்கை**
**வேண்டுமென அமைத்ததென விளங்கும் அன்னம்."**

பகைவரால் சூறையாடப்பட்ட அரண்மனையில் அன்னம் இருக்கும் காட்சி எப்படியுள்ளது?

**"பாழடைந்த இருள் வீட்டில் விளக்கு, வானப்**
**பனிப்புகையில் எழுந்த கதிர்!..."**

முதலியன போல அன்னம் உள்ளாள்!

பாழடைந்த இருண்ட வீட்டில் இருக்கும் விளக்கு பயன்படாதது போல, அன்பும் அறிவும் அழகும் பண்பும் இளமையும் பொருந்திய அன்னம், உரிமையாவுமிழந்து பயனற்று இருக்கிறாள்! பனிப்புகை மூட்டத்திடையே தோன்றும் கதிரவன் முழுஒளி வீசமுடியாததைப் போல, துயரங்களால் சூழப்பட்ட அன்னம் இருக்கிறாள்!

இங்ஙனம் 'பாண்டியன் பரிசு' காப்பியத்தில் தொட்ட தொட்ட இடமெல்லாம் உவமைத் தொடர்கள் அமைந்து சுவையூட்டுகின்றன! அனைத்தையும் விளக்கினால் பெருகுமாகையால், உவமைத் தொடர்களை மட்டும் தொகுத்துத் தருகிறேன்.

# ஏனைய உவமைத் தொடர்கள்

1. கடலைப் போலே. இயல் 1–பா1
2. கார் மிகுத்தால் போலே. "
3. கைகாட்டி " வா பகையே" என அழைக்கும் புதுமை போல். (1–3)
4. என் ஆவிபோன்றவள் நீ. (3–3)
5. தன் நிழல் போலே. (3–7)
6. சிங்கத்தைப் போல் (3–7)
7. பனைமரங்கள் இடி வீழக் கிழிந்து வீழும் பான்மை போல் (5–2)
8. அணைகடந்த வெள்ளத்தைப் போல்.
9. விரிநீர் போய் மடைதோறும் பாய்வதைப்போல (9–1)
10. கைத் தூண்டில் சிறுமீ னாய்க்கலங் குகின்ற. (10–2)
11. பால் நேரில் காய்ச்சி அதில் சீனி இட்டுப் பத்து வகைச் சிற்றுணவு ஒத்த பெண்ணும்... (14–6)
12. ஒரு குலையில் ஒரு காயில் தீமைகாணில் உயர் காய்கள் அத்தனையும் வெறுப்பதுண்டோ? (15–1)
13. தேனடையும் ஈயும் போல் மகனும் தானும். (16–4)
14. எலிகள் ஓடிப் பண்டங்கள் உருட்டுதல்போல். (16–7)
15. வாங்கியதோர் வில்லைப்போல் வளைந்தமேனி வானுயர்ந்த குன்றுபோல் நிமிர்ந்து நின்றான். (17–7)

16. நெய்யாலே மூண்டெழுந்த நெருப்பைப் போலே. (19–2)
17. எதிரெதிரே இருதழற் பந்துகள் சுழன்றே
இருப்பது போல் . (20–4)
18. பாய்ந்தனன் பல் ஆடுகட்குள் வேங்கை போலே. (24–2)
19. கன்னம் மறைக்குந் தாடியுடைய தாத்தா கண்
ணொத்த பையனொடு செல்வதைப் போல். (25–1)
20. முகிலின் மீண்ட திங்களென. (28–5)
21. சீறுகின்ற பாம்புக்குத் தவளையூரில்
திருமுடி சூட்டுவது (போல்). (30–2)
22. தெண்ணீரின் கரைமீனாய்த் துடிக்கும். (37–2)
23. சுரப்பற்ற பசுக் காம்பைப் போல். "
24. புனத்திலுறும் புதல் போலே. (37–2)
25. அனற் கொள்ளிப்பட்ட பிள்ளை கதறும் போதில்
அம்மா என்பது போல. "
26. மணமிழந்த விரிமலரைப் போலிருந்தாள் (37–2)
27. கமழாத புதிர்ப் பூப்போல். (49–4)
28. கவணோடும் கல்லைப் போல். (49–5)
29. **" தொத்துகின்ற வௌவால் போல் மரத்தின் மீதும்**
**தூங்குகின்ற பூனைபோல் பரண்கள் மீதும்**
**முத்தெடுக்கும் மனிதர் போல் கிணற்றினுள்ளும்**
**முட்டையினைப் போல் வீட்டின் இடுக்கினுள்ளும்**
**மொய்த்திருக்க லானார்கள்! கருத்தின் பூதம்**
**முன்னிற்கும் பூதமாய் எங்கும் கண்டே."** (49–6)
30. கசங்கிய ஓர் கொடிபோல. (54–2)
31. தேடிப்போன கன்ன லொன்று காலடியில்
கிடைத்ததைப் போல். (57–2)
32. தீனியிட்டுக் கோழியினை மடக்குவார் போல். (57–10)
33. தீ விரைவில் கொல்லுதல் போல். (57–14)

34. திங்களிடம் குளிர்போலும் கதிரவன்பால் செந்தழல் போலும் பூவில் மணமே போலும். (55–17)

35. தேனைக் கொண்டே பொழியும் மழையைப் போல.(61–1)

36. பூவை மற்றோர் பூ மறைப்பது போலும். (62–2)

37. மறவன் தூக்கி ஊதுகின்ற வளைகொம்பின் புருவம். (62–3)

38. மோதுகின்ற இளங்களிறு போல் நடந்து."

39. " கிளிக்கழுத்தின் பொன்வரி போல் அரும்பும் மீசை
கீழக்கடலி ன்மாலை வெயில் கலந்த நில
ஒளித்திரை போல் தலைமயிர்! சிங்கத்தின் தோற்றம்
உயிர்ப்பரிதி வான் போன்ற மேனி வாய்ந்தான்!
துளித்தநறுந் தேனென்று சொல்லுஞ் சொல்லைத்
தொடங்கு குரல் முழங்குகின்ற கடலே! (62–4)

40. இனிநானும் இவ்வுடலும் புளியும் ஒடும் என்றிருக்கும் ஒர் துறவி. (63–1)

41. சுரும்பெடுத்த இசை போலும் சொல். (66–5)

42. வான்பிடிக்கச் செப்பனிட்ட தேர் போன்றான். (68–4)

"பனையினின்று காய்இற்று வீழ்வது போல்
நரிக்கண்ணன் (74–1)

தன் கருந்தலை வீழ்ந்ததுவே அன்னத்தின் வாளால்.

" தீப்பட்ட காட்டினிலே வேங்கை யோடு
சிறுமுயலும் சாதல்போல் நரியின் மைந்தன்
சாப்பாட்டுப் பொன்னப்பன் தானும் செத்தான்!" (75–1)

"விண்ணிடையே பன்னூறாயிரம் மீன்கட்கு
வெண்ணிலவுபோல், அந்த மங்கை அன்னம்
மண்ணிடையே பெண்ணினத்துக்கு ஒருத்தி." (76–2)

"தேனைப்போல் மொழியுடையாள், அன்றலர்ந்த
செந்தாமரை மலர்போல் முகத்தாள், கெண்டை

**மீனைப்போல் விழியுடையாள் விட்டதிர்ந்த**
**மின்னைப்போல் நுண்ணிடையாள்;யாவுங்கொண்ட**
**வானைப்போல உயர்வாழ்வு வாழ்ந்தாள்.....**
**மானைப் போன்றாள்......!"** (76–3)

47. புன்னைமரம் மலர்குலுங்க நடந்ததென்ன. (77–7)

48. தமிழும் அன்பும் பிசைந்தாற் போல்
பேசியிருப்போமே. (79–1)

49. வாழ்க்கையிலே வன்பிணிகள் பாய்ந்ததைப் போல்.(81–1)

50. தைக்கின்ற வேல்நூறும் அம்பு நூறும் சுருக்கென்று
பாய்ந்ததுபோல் உளந்துடித்தே.

51. நுனியேறி அடிமரத்தை வெட்டுவார்ப்போல். (87–8)

52. தெங்கு பெருங்குலை சுமந்ததைப் போல். (89–2)

53. எழுதிவைத்த ஓவியங்கள் உயிர் பெற்றாற்போல். (93–1)

# 16. உருவகச் சுவை

உவமையின் மறு வடிவமே உருவகம். உவமை, சுண்டக் காய்ச்சிய பால் போன்றது. உருவகம், பாலாடைக் கட்டி போன்றது. உவமையினும் உருவகம் சுவை மிக்கது.

'தேன்தமிழ்' என்பது உவமை. இதில் உவமானமாகிய தேனும், உவமேயமாகிய தமிழும் தனித்தனிப் பொருள்கள்.

'தமிழ்த்தேன்' என்பது உருவகம். இதில் இரண்டும் ஒன்றாகி, அதாவது தமிழே தேனாகி மிக்க சுவை பயக்கிறது. ஆன்மாவும் பரமான்மாவும் இரண்டறக் கலந்து அத்வைதமாவதுபோல், உவமானமும் உவமேயமும் இரண்டறக் கலந்து அத்வைதமாவதே உருவகம். இத்தகைய உருவகம் சான்றோர் கவிகளில் நிறைந்து, கற்போருக்குப் பேரின்பம் பயக்கும்.

இனிப் பாண்டியன் பரிசில் வரும் சில உருவகங்களைச் சுவைப்போம்:

ஒவ்வொரு நாளும் கழியும்போது, நமது இளமை குறைந்து கொண்டிருக்கிறது. இதைப் புரட்சிக் கவிஞரின் உருவகத்தால் நோக்குவோம்.

காதலின்பத்தைத் துய்க்கத் துடிக்கும் அன்னம் வேலனிடம் கூறுகிறாள்:

**பிள்ளைநிலை என்னுமொரு கனியின் சாறும்**
**பேரிளமை என்னுமொரு கரும்பின் சாறும்**
**கொள்ளைபடப் பெய்து வைத்த இளமை என்னும்**
**கொப்பரையில் நாள் என்னும் பூனை நாவால்**
**மொள்ளையிலே 'உயிர்' என்பார் பார்த்திருத்தல்**
**முறை தானோ என்றுரைத்தாள் அன்னம்!...............**
**.....................................................................**

நாள் என்னும் பூனை நக்க நக்க, பேரிளமை என்னும் கரும்பின் சாறு குறைந்து கொண்டே உள்ளதாம்.

**நாளென ஒன்று போல் காட்டி உயிரீரும் வாள்"**

என்னுங் குறட்பகுதி ஒப்பு நோக்கத் தக்கது.

"வேலன் காதில் வாய் மலரை ஒற்றி மலர்த்தேனைப் பெய்தாள்" –காதலன் காதில், காதலி காதல் மொழி பேசுவதையும், அது அவனுக்கு இன்பந் தருவதையும், 'வாய் மலர்', 'மலர்த்தேன்' என்னும் உருவகங்கள் எவ்வளவு அருமையாக விளக்குகின்றன!

**"செந்தமிழ் நாடெனும் போதினிலே-இன்பத்**
**தேன் வந்து பாயுது காதினிலே"**

என்னும் பாரதியாரின் கவிதை வரிகளை ஒப்பிட்டு மகிழ வேண்டும்.

அன்னம் தனித்திருக்கும் பொழுது, "மென்மலர் நான்! தும்பியவன் என வியந்தாள்" ஆம்! காதலி தேன் நிறைந்த மலராகவும், காதலன் மலர் கசங்காமல் தேன் பருகும் தும்பி...வண்டு–ஆகவும் மாறும் வியப்பைக் காண்கிறோம்.

வேலன் தனித்திருக்கும் பொழுது அன்னத்தை எண்ணி ஏங்குகின்றான்.

**பயிரடைந்த ஊட்டத்தினூடு தோன்றும்**
**பச்சைப் பசுந்தோகை மயிலோ! நல்ல**
**உயிரடைந்த ஓவியமோ! அச்சில் வார்த்த**
**ஒளியடைந்த வடிவமோ!.................................**

காதலியைத் தோகை மயிலாகவும், உயிரோவியமாகவும், வார்த்தெடுத்த அழகும் ஒளியும் நிறைந்த சிலையாகவும் உருவகித்து மகிழ்கிறான் காதலன்.

இங்ஙனம் உருவகச் சுவையும் ஆங்காங்கே பாண்டியன் பரிசு பகர்கிறது.

# 17. சொல்லோவியச் சுவை

தலைசிறந்த ஓவியக் கலைஞரால் வரைந்து காட்ட முடியாத காட்சிகளையும் கருத்துகளையும், தலைசிறந்த கவிஞரால் சொல்லோவியமாகத் தீட்டிக் காட்ட முடியும். அத்தகைய கவிஞர்களுள் புரட்சிக் கவிஞரும் ஒருவர். பாண்டியன் பரிசு தரும் சொல்லோவியங்களுள் சிலவற்றை நோக்குவோம்.

வஞ்சித்துக் கொல்லப்பட்ட தாயை எண்ணி, மகள் அன்னம் வருந்தும்போது, வருகின்ற பாடல் ஒன்று தாய் குழந்தையை அணைத்து முத்தமிட்டுக் கொஞ்சிப் படுத்திருக்குங் காட்சியைச் சொல்லோவியம் ஆக்கிக் காட்டுகிறது. இதோ அப்பாடல்!

ஒப்புரைக்க முடியாத அன்னை என்னை
ஒருக்கணித்து மார்பணைத்து மேனியெல்லாம்
கைப்புறத்தில் ஆம்படிக்குத் தழுவி என்றன்
கண் மறைக்கும் சுரிகுழலை மேலொதுக்கி
மைப்புருவ விழிமீது விழியமைத்து
மலர்வாயால் குளிர்தமிழால் கண்ணே என்று
செப்பி முத்தமிட்டாளே! அன்புள்ளாளின்
செந்தாமரை முகத்தை மறப்பே னோநான்?

இப்பாடல், தாய் சேய்க் காட்சியை–தாய்ப்பாசத்தை எவ்வளவு சிறந்த சொல்லோவியமாக்கிக் காட்டுகிறது! 'மலர்வாயால் குளிர்தமிழால் கண்ணே என்று செப்பி' முத்தமிடுங் காட்சியை ஓவியத்தில் தீட்டிக் காட்ட முடியுமா? இச்சொல்லோவியத்திலுள்ள ஒவ்வொரு சொல்லும், தாய்ப்பாசத்தின் ஒவ்வொரு செயலை விளக்குவதாக உள்ளதை மீண்டும் மீண்டும் படித்துச் சுவைக்கலாம்.

'அன்புள்ளாளின் செந்தாமரை முகத்தை மறப்பேனோ நான்?' என்னும் பகுதி, தாயை இழந்த மகளின் ஏக்கத்தை நன்கு விளக்குகிறது.

மற்றோர் காட்சி. நரிக் கண்ணனின் ஏற்பாட்டின்படி 'எட்டி' என்பவனுக்குப் பூதவேடம் இடும் காட்சியை விளக்கும் சொல்லோவியம்:

"எட்டி" எனும் ஓராளை அழைத்து வந்தே
எரிவிழியும் கருமுகமும் நீண்ட பல்லும்
குட்டைமயிர் விரிதலையும் கொடுவாள் கையும்
கூக்குரலும் நீர்ப்பாம்பு நெழியும் மார்பும்
கட்டியதோர் காருடையும் ஆக மாற்றிக்
காணுவார் நிலைப்படியே பூதம் ஆக்கி
விட்டார்கள் மலையின் மேல்! "எட்டி" நின்று
வெளியெல்லாம் அதிர்ச்சியுறக் கூச்ச லிட்டான்.

எரிகின்ற விழி, கருத்த முகம், நீண்ட பல், குட்டையான மயிர்களடர்ந்த விரிந்த தலை, கொடுவாள் ஏந்திய கை, நீர்ப்பாம்பு நெழிகின்ற மார்பு, கரிய உடை, வானவெளியும் அதிரும்படியான கூக்குரல்—இவ்வளவும் சேர்ந்து, பூதத்தையே நம்முன் நிறுத்தி, அச்சத்தையும் உண்டாக்கி விடுகின்றன.

பிறிதோர் காட்சி. அன்னம், தன் காதலன் வேலனின் அழகிய தோற்றத்தையும், வீரச் செயல்களையும், பண்பாட்டையும் எண்ணி எண்ணி மகிழ்ந்து, அவன் காதலுக்காக ஏங்கிக் கொண்டிருக்கும் பொழுது, உறக்கம் வந்து விழியைக் கௌவுகின்றது. அப்பொழுது:

**நனவுல கில் இவ்வண்ணம் இருந்தாள் அன்னம்!**
**நல்விழியைத் துயில் வந்து கௌவ ஆங்கே**
**கனவுலகில் இலக்கியத்தைத் தொடர்வாள் ஆனாள்**
**கைம்மலரில் தலைசாய்த்துப் புன் சிரிப்பைக்**
**கனியிதழில் புதைத்துடலை ஒருக்கனித்துக்**
**கைவல்லான் வைத்த யாழ் போற்கிடந்தாள்.**

**.........................**

ஓரழகிய இளம் பெண், கனவில் காதலனைக் கண்டு களித்து, புன்சிரிப்புடன், அழகிய யாழ்போல் படுத்திருக்குங் காட்சியை, மேற்கண்ட சொல்லோவியப் பாடல் நம் கண்முன் நிறுத்தி நம்மை மகிழ்விக்கிறது!

இங்ஙனம், தொல்காப்பியர் காட்டிய எட்டுவகைச் சுவைகளுடன், வேறு பற்பல சுவைகளையும் வாரி வழங்கி இன்புறுத்தும் காப்பியமாகப் பாண்டியன் பரிசு திகழ்கிறது! பயின்று சுவைமின்!

# 18. சிறந்த சொற்றொடர்கள்

கவிஞனின் சொல்லாட்சித் திறத்தால், கற்றவர் உள்ளத்தை யீர்த்து இன்புறுத்தும் சிறந்த சொற்றொடர்கள் அமைவதுண்டு. அத்தகைய சொற்றொடர் சிலவற்றைத் தொகுத்துத் தருகிறேன்.

1. தமிழ்ப் பூவால் இசைப்பாக்கள் புனைந்திருந்தார். (இயல் 3 பா 1)
2. வாட்போரை விரும்பும் அவள் தமிழ் நெஞ்சம்!
வகையறியா அவள் இளமை மறுத்து நிற்கும்! (4–1)
3. வெற்றி மங்கை நூறுமுறை ஏமாந்தாள்
ஆளைத் தேடி. (5–1)
4. வாட்போருக்கு இலக்கியத்தை நல்கும் போதில். (4–1)
5. கலைந்ததுவோ என்காதல் ஒவியந்தான்! (8–1)
6. உயிர்விளைக்க நெல் விளைக்கும் உழவரெல்லாம்
களிவிளைக்குந் தமிழாலே பண்டிதர்க்குக்
கலை விளைக்கும் எளிய நடை பாட்டுப்பாடி. (49–1)
7. இருட்டறையில் உள்ளதடா உலகம்! சாதி
இருக்கின்ற தென்பானும் இருக்கின்றானே! (56–3)
8. எல்லார்க்கும் எல்லாம் என்றிருப்பதான
இடம்நோக்கி நடக்கின்றது இந்த வையம்! (56–4)
9. கல்லாரைக் காணுங்கால் கல்வி நல்காக்
கசடர்க்குத் தூக்குமரம் அங்கே உண்டாம். (56–4)
10. விரியுலகில் ஒருத்திநீ அழகின் உச்சி! (57–5)
11. தொன்மையிலும் உச்சியிலே அறிவால் வாழ்ந்த
பொன்னகத்தில் தமிழகத்தில் தாயகத்தில். (57–16)
12. தன்பொருட்டு வாழ்வான் ஒர் ஏழை!
மக்கள்தம் பொருட்டுவாழ் வானோர் செல்வன்! (57–18)

13. எடுக்க எடுக்கக் குறையாச் சுவையின் ஊற்றை
இனிக்க இனிக்கக் காணும் ஆண்மை. (62-5)

14. கோளுக்குங் கோள் பொய்க்கும் பொய்யே வேண்டும். (66-2)

15. சுவையெல்லாம் பிடித்தெடுத்த தூயதமிழ் நடைபிடிக்கும். (68-4)

16. கன்னலிலே சாறெடுத்துத் தமிழ் குழைத்துக்
கனி இதழால் பரிமாறும் இனிய சொல்லாள். (76-1)

17. தமிழும் அன்பும் பிசைந்தாற் போல் பேசியிருப்போம். (79-1)

18. தொகுத்து வைத்த முத்தங்கள் கொடுக்கல் வாங்கல்
தொழில் விரைந்து நடக்குமடி. (79-2)

19. துன்பத்து மலையடியில் புதைந்தாள் ஆத்தா! (83-2)

20. தனித்திருக்கும் இசைத் தமிழில் தேனுங்கூட்டி
வடித்தெடுத்த மொழியாளே! (85-4)

21. இன்ப வாழ்க்கையெனும் கடற்கரையின் ஒட்டில்
நானோ சிறக்க ஒருமுறையேனும் மூழ்கவில்லை (85-5)

22. தமிழ் வளர்க்கும் புது நூற்குத் தொண்டு செயார். (87-8)

23. தென்றல் காற்றின் பண்ணமைந்த தமிழ்ப் பொதிகை
எனக்கே என்றேன். (87-8)

வாழ்க பாவேந்தர் புகழ்!

ஓங்குக பைந்தமிழ்!

# திருக்குறள் பொன்மொழிகள்

**திருக்குறள் ஒன்றே திருவெலாம் தந்திடும்.**

## அறத்துப்பால்

திருக்குறள்
அதிகார எண்

1. அறநெறி வாழ்வே இறைவழி பாடாகும்.
2. வானம் பொய்த்தால் வாழ்வு பொய்க்கும்.
3. துறவியின் பெருமை இணையிலாப் பெருமை.
4. அறநெறி வாழ்வால் அனைத்தும் பெறலாம்.
5. இல்லறம் ஒன்றே நல்லறம் ஆகும்.
6. நல்ல மனைவியால் நலமெலாம் வாய்க்கும்.
7. நல்ல மக்களே நாட்டின் செல்வம்.
8. அன்பு வாழ்வே அனைத்தும் நல்கும்.
9. விருந்தோம்பும் வாழ்வு அரும்பெரும் வாழ்வாம்.
10. இனிய சொல்லே இன்பம் பெருக்கும்.
11. நன்றி மறவாமை நாளும் போற்றுக.
12. நடுவுநிலை தவறின் நலமெலாம் அழியும்.
13. அடக்க வாழ்வு ஆக்கம் பெருக்கும்.
14. ஒழுக்க வாழ்வே உயர்வெலாம் நல்கும்.
15. பிறன்மனை விழைவோன் பேயன் ஆவான்.
16. பொறுமையுடையோர் பெருமை பெறுவர்.
17. அழுக்காறு கொண்டால் அழிவே மிஞ்சும்.
18. வெஃகுதல் செய்யின் அஃகுதல் ஆகும்.
19. புறங்கூறும் வாழ்க்கை பொய்ம்மை வாழ்க்கையே.
20. பயனில பேசுவோன் பதடியாவான்.
21. தீமை செய்தால் தீமையே பெறுவாய்.
22. ஒப்புரவுப் பண்பால் உலகம் வாழும்.
23. ஈந்து மகிழ்தலே இணையிலா இன்பம்.
24. புகழ்பட வாழ்வதே பொய்யாத வாழ்வு.
25. அருள்நெறி ஒன்றே அல்லல் அழிக்கும்.
26. புலால் நீக்கின் புன்மை நீங்கும்.
27. கடமை செய்தலே கசடறு தவமாம்.
28. படிற்றொழுக்கம் பாடாய்ப் படுத்தும்.
29. களவுத் தொழிலால் கேடே விளையும்.

30. வாய்மையாளரை வையகம் போற்றும்.
31. சினங்கொண்டவன் இனத்தோடு அழிவான்.
32. இன்னா செய்தார்க்கே இன்னா சேரும்.
33. கொல்லும் தொழிலே எல்லாப் பாவமும்.
34. நிலையாதவற்றால் நிலைப்பவை செய்க.
35. பற்று விட்டவனைத் துன்பம் பற்றாது.
36. மெய்யறிவு பெற்றால் மேன்மையுண்டாம்.
37. அவாவை அறுப்பதே அழியாத இன்பம்.
38. இயற்கை ஆக்கவும் அழிக்கவும் வல்லது.

## பொருட்பால்

39. நன்னெறியில் ஆள்பவன் நல்ல தலைவன்.
40. கல்வி ஒன்றே கேடிலாச் செல்வம்.
41. கல்லாதான் எல்லாம் இருந்தும் இல்லாதான்.
42. செவிச் செல்வம் உடையவர் செம்மையில் சிறந்தார்.
43. அறிவுச் செல்வம் ஆக்கம் பெருக்கும்.
44. குற்றம் நீக்கின் அற்றம் நீங்கும்.
45. பெரியாரின் துணையே பெரிய வலிமை.
46. சிற்றினச் சேர்க்கை சீரெலாம் அழிக்கும்.
47. ஆராய்ந்து செய்தால் அரும்பயன் ஆகும்.
48. அளவறிந்து வாழ்ந்தால் வளமுடன் வாழலாம்.
49. காலம் போற்றின் கருதியவை பெறலாம்.
50. வலியவர் வலிமையும் உரிய இடத்தில்தான்.
51. தேராது தெளிந்தால் தீராது துன்பம்.
52. தக்கவரைத் தேர்ந்து தகுதியைப் பெருக்கு.
53. சுற்றம் பெருகின் அற்றம் சுருங்கும்.
54. பொச்சாப்பு உடையார்க்குப் புகழ்வு வாழ்வு இல்லை.
55. நல்ல ஆட்சியே நாட்டைக் காக்கும்.
56. பொல்லார் ஆட்சியில் பொல்லாங்கே மிகும்.
57. வெருவந்த செய்வோன் விரைந்து அழிவான்.
58. இரக்கங்காட்டுதல் இணையிலாப் பண்பு.
59. ஒற்றர் உதவிக்கு ஒப்பே இல்லை.
60. ஊக்கமுடையவர் ஆக்கம் பெறுவர்.
61. மடியை மடித்தால் மாண்பயன் கிட்டும்.
62. முயன்றால் முடியாத செயலும் உண்டோ?
63. துன்பமே இன்பமானால் துன்பம் ஏது?

64. அன்பு அறிவு செயல்திறன் உடையோனே அமைச்சன்.
65. சொல்லினாற்றல் வெல்லும் உலகை.
66. நல்ல செயலே நலமெலாம் பயக்கும்.
67. வினைத்திட்பம் இருந்தால் பனையளவு பெருமையாம்.
68. செய்யுந்திறத்தால் சீர்மை ஓங்கும்.
69. தூய்மையுடன் சொல்லாற்றல் தூதனுக்கு வேண்டும்.
70. தகுதியறிந்து தக்காங்கு பழகுக.
71. அகத்தைக் காட்டுவது முகமே ஆகும்.
72. கற்றோர் அவையில் கற்றவை கூறுக.
73. அவையஞ்சுவோர் அறிவால் என்ன பயன்?
74. நலமெல்லாம் மிக்க நாடே நாடாகும்.
75. காக்கும் திறத்தால் காக்க நாட்டை.
76. அறவழிப் பொருளால் ஆக்கம் பெருகும்.
77. நல்ல படையே நாட்டிற்கு ஏமம்.
78. உயிருக்கு அஞ்சாமை வீரருக்கு அழகு.
79. நல்லோர் நட்பு நலமெலாம் நல்கும்.
80. ஆராயாத நட்பு அழிவே செய்யும்.
81. பழைமை பாராட்டல் பண்பில் பெரிது.
82. தீயவர் நட்பு தீயினும் தீமை தரும்.
83. தகாத நட்பைத் தள்ளல் வேண்டும்.
84. பேதையின் செயல்கள் பீழையே தரும்.
85. புல்லறிவாளன் புன்மையே பெறுவான்.
86. இகலைப் பெருக்கின் இன்னாமை பெருகும்.
87. தகுதியிலான் பகையால் தகுதிகள் சேரும்.
88. பகைத்திறம் தெரிந்து பகையைப் பாழ் செய்.
89. உட்பகை நேர்ந்தால் ஒழிவும் நேரும்.
90. பெரியார் சினந்தால் பேரா இடும்பையே.
91. மனைவிக்கு அடிமை மாண்பிலாச் செயலாம்.
92. பொது மகளிர் தொடர்பு புன்மையெலாம் சேர்க்கும்.
93. குடிப்பவன் குடியைக் குடியே கெடுக்கும்.
94. சீரும் சிறப்பும் சூதே அழிக்கும்.
95. தகுதியான உணவே தகுதியான மருந்து.
96. உயர்ந்த பண்புகளே உயர்குடிப்பிறப்பாம்.
97. மானவாழ்வே மனித மாண்பு.
98. பெருந்தன்மை போற்றி வாழ்தல் பெருமையாம்.
99. எல்லாப் பண்பையும் ஏற்றவரே சான்றோர்.

100. பண்புடையவரால் பாரோர் நலம் பெறுவர்.
101. உதவாதான் செல்வம் உடையவனுக்கே தீமை தரும்.
102. பழிக்கு நாணார் பாவியர் ஆவர்.
103. குடியைக் காப்பவனே குடியில் உயர்ந்தவன்.
104. உழவு செழித்தால் உலகம் செழிக்கும்.
105. கொடிய வறுமையினும் கொடியது இல்லை.
106. கொடுப்பாரைக் கண்டால் கேட்பாருக்கு நல்லதாம்.
107. இரத்தலைவிடப் பெரிய இழிவும் உண்டோ?
108. அச்சுறுத்தியே கயவரை அடக்க முடியும்.

## காமத்துப்பால்

109. ஆ! இவளழகு என்னை வாட்டுகிறதே!
110. காதலியின் குறிப்பு காதலனுக்கே புரியும்.
111. காதலர் கூடும் இன்பமே இன்பம்.
112. என் காதலியின் அழகிற்கு இணையே இல்லை.
113. உண்மைக் காதலர் உடலுயிர் போன்றார்.
114. காதல்நோய் ஊரறிய ஏதம் செய்யும்.
115. உண்மைக்காதல் ஊரார் பழியால் வெல்லும்.
116. இனியார் பிரிவினும் இன்னாதது உண்டோ?
117. பிரிவுத்துன்பம் பெருங்கடலாகும்.
118. கண்டதும் கண்கள் அழுவதும் கண்களே.
119. பிரிந்த உடனே பசலையும் வந்து விட்டதே!
120. தனிமைத் துயரே தனிப்பெருந் துயராம்.
121. காதலர் நினைவே காதலை வாழ்விக்கும்.
122. காதலரைக் காட்டும் கனவே வாழ்க!
123. பிரிந்தார்க்குப் பொல்லாத மாலையே கூற்று.
124. தோளும் முகமும் தொல் கவின் வாடும்.
125. நெஞ்சமே பிரிந்தாரை நினைத்து ஏங்காதே.
126. கூடல் நேர்ந்தால் ஊடல் ஓடிவிடும்.
127. நாடும் உள்ளம் நாளும் வாடும்.
128. காதலியின் குறிப்பு காதலனுக்கே புரியும்.
129. கூடல் விரும்பின் ஊடல் தோற்கும்.
130. என் பொல்லா நெஞ்சே! என்றுமே நீ உதவாய்!
131. புலவிதானே கலவிக்கு இன்பம்.
132. புலவியின் நுணுக்கம் பெரிதே அம்மா!
133. ஊடலும் கூடலும் காதலை வளர்க்கும்.

இந்நூலாசிரியர் எழுதிய **"திருக்குறள் எளிய தெளிவுரையும், பொன்மொழியும்"** என்னும் நூல் ஆறு மாதத்தில் மூவாயிரம் நூல்கள் விற்பனையாகி சாதனை படைத்துள்ளது. இப்பொழுது இரண்டாம் பதிப்பும் தயாராகிறது. இந்நூலில் ஒவ்வொரு அதிகார இறுதியிலும் அதிகாரச்சாரமாக ஒரு பொன்மொழியை ஆசிரியரே இயற்றிச் சேர்த்துள்ளமை சிறப்பிற்குரியது. இந்நூலில் உள்ள பொன்மொழிகளைத் தொகுத்து, அதன் ஆங்கில ஆக்கத்தினையும், அதற்கான விளக்கத்தினைத் தமிழிலும் அளித்து, **"திருக்குறள் பொன்மொழியும், தெளிவுரையும்"** என்னும் தனிநூலாகச் செய்துள்ளார்.

வாசகர்களின் நலனுக்காக அந்நூலில் உள்ள பொன்மொழிகளை மட்டும் தொகுத்து, இப்பகுதியில் வெளியிட்டுள்ளோம். இதன் விளக்கமாய் அமைந்த "திருக்குறள் பொன்மொழியும், தெளிவுரையும்" என்னும் நூலினையும், "திருக்குறள் எளிய தெளிவுரையும், பொன்மொழியும்" என்னும் நூலினையும், இந்நூலில் குறிப்பிட்டுள்ள முகவரிகளில் வாங்கிப் பயனடைய வேண்டுகிறோம்.

**- பதிப்பகத்தார்.**

1) திருக்குறள் எளிய தெளிவுரையும்
பொன்மொழியும் ரூ.25.00

2) திருக்குறள் பொன்மொழியும்
தெளிவுரையும் ரூ.10.00

3) தமிழ் மணக்கும் மலேசியா ரூ.50.00

திருக்குறள் மூதறிஞர் ஆ.வே. இராமசாமி 30 நூல்களின் ஆசிரியர். இவர் எழுதிய "திருக்குறள் எளிய தெளிவுரையும் பொன்மொழியும்" அதிக அளவில் விற்பன்னையாகிக் கொண்டுள்ளது. இந்நூலில் ஒவ்வொரு அதிகாரத்தின் இறுதியிலும் அதிகாரத்தின் சாரமாகக் கொடுக்கப்பட்டுள்ள பொன்மொழி அறிஞர்களால் பெரிதும் பாராட்டப்படுகிறது.

இளையோருக்கும் முதியோருக்கும் பயன்படும் நூல்! இல்லந்தோறும் இருக்கவேண்டிய நூல்! விலை ரூ.25.00